உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




தொகுதி 22 | ஈசுவர௵ சித்திரை௴ ௧௳ | 1937௵ ஏப்ரல்௴ 13௳ | பகுதி 10


## கடவுள் வணக்கம்.

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே. (1)

இடர்கெடுத்து என்னை யாண்டுகொண்டு என்னுள்
இருட்பிழம்பு அறஎறிந்து எழுந்த
சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுள் சோதீ
அடல்விடைப் பாகா அம்பலக் கூத்தா
அயனொடு மாலறி யாமைப்
படரொளி பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியமா பணியே. (2)

தற்பரம் பொருளே சசிகண்ட சிகண்டா
சாமகண் டாஅண்ட வாணா
நற்பெரும் பொருளாய் உரைகலந்து உன்னை
என்னுடை நாவினால் நவில்வான்
அற்பன்என் உள்ளத்து அளவிலா உன்னைத்
தந்தபொன் அம்பலத் தாடீ
கற்பமாய் உலகாய் அல்லையா னாயைத்
தொண்டனேன் கருதுமா கருதே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) பிரகாச மிருந்த விளக்கே! பந்த பாசங்களால் சலனப் படாத ஒப்பற்ற பொருளே! என்போன்ற மக்கள் உணர்விலும் அறிய முடியாது யாவற்றையுங் கடந்து நிற்கும் நல்லுணர்வுப் பிழம்பே! தெளிவான பளிங்குக் கல்லைப்போன்ற திரளான நவமணி மலையே! சித்தத்தில் உன்னை நினைத்த மாத்திரத்தில் இன்ப மளிக்குஞ் செந்தேனே! கருணை ததும்பும் மனதுக்குச் சந்தோஷ மளிக்கும் ஆனந்தக்கனியே! சிதாகாசமாகிய திருச்சிற்றம்பலத்தை நடன மாடுவதற்குச் சபையாகக்கொண்டு நிர்மலமான தெய்வ நடனத்தை விரும்பி யாடும் நடராஜப் பெருமானே! உன் திருவடித் தொண்டனாகிய அடியேன் உன்னை எவ்வாறு வாழ்த்துவ தென்று எடுத்துக் கூறி யருள்வாயாக. (எ-று.)

இறைவன் பரஞ்சோதி யாதலால் 'ஒளிவளர் விளக்கே' என்றும், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களாலும் அசைக்க முடியாத தன்மை வாய்ந்தவன் என்பார் 'உலப்பிலா ஒன்றே' என்றும், ஜீவகாருண்யம் உடையவர்களுக்குத்தான் மகிழ்ச்சித் தருவான் என்பார் 'அளிவளர் உள்ளத்து ஆனந்தக்கனியே' என்றும் கூறினார். (1)

(இ-ள்) துன்பத்தைத் துடைத்து அடியேனை ஆட்கொண்டு என்னிடத்தில் பொதிந்திருக்கும் அறியாமையாகிய இருள் கூட்டத்தை அறவே யொழித்து எழுந்த பிரகாசம் பொருந்திய நவமணிகளாகிய தீபத்தைப்போல உன்னே பிரகாச முண்டாக்கித் திகழும் பரிசுத்தமான ஜெகஜ்ஜோதி! வலிமை பொருந்திய ரிஷபவூர்தி! சிதம்பரத்தில் நடனஞ் செய்யும் பெருமானே! பிரம்மவிஷ்ணுக்களாலும் அறிய முடியாதவாறு பேரொளி பரப்பி எங்கணும் நிறைந்து நிற்கும் இறைவனாகிய உன்னைத் திருவடித் தொண்டனாகிய அடியேன் எவ்வாறு தொழுவதென்று பணித்தருள்வாயாக. (எ-று.)

மக்களைச் சூழ்ந்திருக்கும் ஆணவ இருளை இறைவன் தன் அருள் ஒளியால் போக்கி யாட்கொண்டருளுகிறான் என்னும் உண்மையை இப்பாட்டில் எடுத்துக்காட்டி யிருக்குந் திறம் பாராட்டத் தக்கதாகும். (2)

(இ-ள்) தற்பரம் பொருளே! சசிகண்ட சிகண்டா! சாமகண்டா! அண்டவாணா! தேவரீரை நற்பெரும் பொருளாய் உரை கலந்து அடியேனுடைய நாவினால் பரவி நிற்பதனால், அற்பனாகிய என்னுடைய மனதில் அளவு சொல்ல முடியாத உன்னைக் குடியிருக்கச் செய்த பொன்னம்பலத்தில் நடனமாடும் பெருமானே! காலகற்பமாயும், உலகாயும், இவை யல்லாத பிறவாயும் இருக்கும் உன்னைத் திருவடித் தொண்டனாகிய அடியேன் எவ்வாறு சிந்திப்பது என்று தெளிவித் தருள்வாயாக. (எ-று.)

அன்பர் நினைந்த மாத்திரத்தில் அவர்களது உள்ளக் கமலத்தில் விரைந்து சேரும் இயல்பு வாய்ந்தவன் இறைவனாதலால், 'நற்பெரும் பொருளாய் உரைகலந்து உன்னை என்னுடை நாவினால் நவில்வான் அற்பன் என் உள்ளத்து அளவிலா உன்னைத் தந்த பொன் அம்பலத்தாடீ' என்று விதந்து கூறினார். இறைவன் எல்லாமாய் விளங்குபவன் என்னும் உண்மையை, 'கற்பமாய் உலகாய் அல்லை யானாயை' என்ற அடியால் எடுத்துக் கூறி யிருப்பது கவனிக்கத் தக்கது. (3)




# ஈசன் செயல்!

"ஒன்றை நினைக்கின் அது வொழிந்திட்டு ஒன்றாகும்;
அன்றி அதுவரினும் வந்தெய்தும்-ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்!"

என்று ஔவை மூதாட்டியார் பாடி விட்டுச் சென்றார். இவ் வனுபவ மொழியின் உண்மைத் தத்துவம் நம் ஒவ்வொருவரது வாழ்க்கையிலும்—ஏன்? உலக நிகழ்ச்சிகளிலுங் கூட—மெய்யாகி வருவதைக் காண்கிறோம். அவ்வளவு தூரம் போவானேன்! சமீபத்தில இந்திய அரசியலில் நிகழ்ந்து வரும் சம்பவங்களைக் கவனித்துப் பார்க்கும் போது, இப் பாட்டிலுள்ள அனுபவ மொழி எவ்வளவு பொருத்தமாக இருக்கிற தென்று நமக்கு இனிது விளங்கும்.

பிரிட்டிஷ்—இந்திய சர்க்கார் நமக்கு வழங்கி யிருக்கும் புதிய அரசியல் சீர்திருத்த சட்டத்தின்படி, அந்த அரசியலை அமுலுக்குக் கொண்டு வந்து நடத்தி வைப்பதற்கு அநுகுணமாக ஏற்படுத்தப் பட்ட பொதுத் தேர்தல சமீபத்தில் நடந்தது. இதுவரை சட்ட சபைகளைப் பகிஷ்கரித்திருந்த காங்கிரஸ்காரர்களும் கால நிலையை யொட்டி தங்கள் வேலைத் திட்டத்தை மாற்றிக்கொண்டு இத் தேர்தலில் கலந்துகொண்டனர். தேச விடுதலைக்காகவும், பொதுஜன நன்மைக்காகவும் சதா பாடுபட்டு வரும்-உண்மையாக உழைத்துவரும்—காங்கிரஸ்காரருக்கே இந்தியாவிலுள்ள பெரும்பாலான மாகாணங்களில் பெரு வெற்றி யேற்பட்டது. காங்கிரஸுக் கேற்பட்ட இணையற்ற வெற்றியைப் பாராட்டி, வெற்றி பெற்ற அங்கத்தினர்களுக்கு யோசனை கூறி நாம் "ஆனந்த"னில் எழுதி யிருந்ததை வாசகர்கள் இதற்குள் மறந்திருக்க மாட்டார்கள்.

பொதுத் தேர்தல் முடிவடைந்து விட்டது. அடுத்தபடியாக நடை பெற வேண்டிய தென்ன? பழைய மாகாண சட்டசபைகளும் மந்திரி சபைகளுங் கலைக்கப்பட வேண்டும். பிறகு, ஏப்ரல் மாதம் முதல் தேதியில் ஒவ்வொருமாகாணத்திலும் அரசாங்க சபையும், ஜனப் பிரதிநிதி சபையும் ஆரம்பமாகி யிருக்கவேண்டும். மாகாண கவர்னர்களின் வேண்டுகோளின்படி, அந்தந்த மாகாண சபைகளில்

பெரும்பான்மையாக வந்துள்ள கட்சித் தலைவர்கள் மந்திரிசபையை அமைத்திருக்கவேண்டும். இதுவே அரசியல் சட்டத்தின்படி கிரமமாக நடந்திருக்க வேண்டியதாகும்.

இப் பொதுத் தேர்தலில், பஞ்சாப், வங்காளம், ஸிந்து, அஸ்ஸாம் ஆகிய நான்கு மாகாணங்களில் தவிர, சென்னை, ஐக்கிய மாகாணம், பீஹார், ஒரிஸா, மத்திய மாகாணம், பம்பாய ஆகிய ஆறு மாகாணங்களில் காங்கிரஸ் கட்சியே பெரும்பான்மையாக வந்திருக்கிறது. ஆகவே, இம் மாகாணங்களில காங்கிரஸ் கட்சித் தலைவர்களே மந்திரி சபைகளை யமைக்கவேண்டும். ஆனால் காங்கிரஸ் சட்டசபைகளைக் கைபற்றத் தீர்மானித்ததிலிருந்தே, காங்கிரஸ் இத் தேர்தலில் பெருவாரியான ஸ்தானங்களைப் பெற்றால் மந்திரிபதவி யேற்றுக் கொள்வதா? கூடாதா? என்ற விஷயமாகக் காங்கிரஸ் தலைவர்களிடையே பலத்த விவாதம் நடைபெற்று வந்தது. இப் பிரச்சினைக்குச் சாதக பாதகமான அபிப்பிராயங்கள அவ்வப்போது நாட்டில் உலாவிவந்தன. எப்போது இப் பொதுத்தேர்தலில் காங்கிரஸ்காரர்கள் கலந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டதோ, அப்போதே இம் மந்திரி பதவி பிரச்சினையைப்பற்றியும் ஒருவித முடிவுக்கு வந்து, அம்முடிவை, தேர்தல் அறிக்கையில் வெளியிட்டுவிட வேண்டுமென்று சில தலைவர்கள கருதினார்கள். பொதுத் தேர்தல் முடிவுக கப்புறம், இதைப்பற்றி முடிவு செய்யலாம் எனப் பெரும்பாலான தலைவர்கள் கூறித் தள்ளி வைத்துவிட்டார்கள்.

எனவே, இப்போது, தேர்தல் முடிவுகளெல்லாம் வெளிவந்ததும், மந்திரி பதவி பிரச்சினையைப்பற்றி ஒருவித முடிவுக்கு வர வார்தாவிலும், புதிய டில்லியிலும் காங்கிரஸ் காரியக்கமிட்டிக கூட்டமும, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமும் முறையே நடைபெற்றன. ஏறகனவே, இப் பிரச்சினைபற்றி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளின் அபிப்பிராயங்களைக் காங்கிரஸ் மகாசபை கேட்டிருநததில், பெரும்பாலான மாகாணங்கள் பதவியேற்புக்குச் சாதகமாகவே அபிப்பிராயங்களை வெளியிட்டன. காங்கிரஸ் சமதர்மவாதிகளும், காங்கிரஸ் அதிகாரத்துக்கு வருவதை விரும்பாத பிற கட்சியினரும தவிர, மற்றவர்களெல்லாம காங்கிரஸ் பதவி யேற்று அரசியலை நடத்த வேண்டுமென்றே விரும்பினர். 'காங்கிரஸ் சட்டசபைகளைக் கைபற்றுவது மட்டும் அமையாது; மந்திரி பதவிகளையும் ஏற்றுக்கொண்டால்தான், இதுவரை சுயநல கும்பலான பிற்போக்காளர்களின் கொடிய ஆட்சியில் துன்புற்றிருக்கும் பொது மக்களுக்கு ஏதாகிலும் நன்மை செய்ய முடியும் ; ஆதலால் காங்கிரஸ் காரர்கள கட்டாயம் மந்திரி பதவிகளை யேறகவேண்டும்' என்ற கொள்கைக்குக் கர்த்தர்களான சென்னை மாகாண காங்கிரஸ் தலைவர்கள் பக்கமே நாடு முழுதும் இருந்ததால், காங்கிரஸ் காரியக் கமிட்டியிலும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிலும் சமதர்மவாதிகள் பலமாக வாதித்து எதிர்த்தும், கடைசியாக,

காங்கிரஸ் பதவியேற்க வேண்டுமென்ற தீர்மானமே பெரும்பான்மை யான தலைவர்களால் நிறைவேற்றப் பட்டது. அத் தீர்மானத்தின் சாராம்சம் பின் வருமாறு:—

"மந்திரிகள் அரசியல் சட்டத்துக்குட்பட்டு காரியங்களை நடத்திக்கொண்டு வரும் வரையில் கவர்னர்கள் அநாவசியமாகத் தங்கள் விசேஷாதிகாரங்களைப் பிரயோகஞ் செய்ய மாட்டார்களென காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் நிச்சயமாக அறிந்துகொண்டால்—அதாவது கவர்னர்களிடம் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் வாக்குறுதி வாங்கிக்கொண்டு—அவர்கள் அதைப் பகிரங்கமாகச் சொல்லி, மந்திரி சபை யமைக்க கவர்னர்களோடு ஒத்துழைத்துப் பதவி யேற்கலாம்."

டில்லியில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் மேற்படி தீர்மானம் நிறைவேறியதைக் கண்டு தேச மகா ஜனங்கள் கொண்டாடினார்கள். ஒரு சிலர் கவர்னர்கள் விசேஷாதிகாரங்களை யுபயோகிப்பதில்லை யென வாக்குறுதி யளிப்பார்களா? எனச் சந்தேகித்தனராயினும், பெரும்பாலார் காங்கிரஸ் மகாசபை எப்போது மந்திரி பதவி யேற்கலாம் என்று ஒப்புக்கொண்டு விட்டதோ, அப்போது கட்டாயம் பெரும் பான்மையாக வந்துள்ள ஆறு மாகாணங்களிலும் காங்கிரஸ்காரர்கள்தான் மந்திரி சபையை அலங்கரிப்பார்கள் எனத் திடமாக நம்பிக் குதூகலங் கொண்டனர்.

இவ்வித பெரு நம்பிக்கைக்கு மற்றொரு காரணமுமுண்டு. புதிய டில்லியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும், சட்டசபை யங்கத்தினர்கள் மகாநாடும் நடந்து கொண்டிருக்கையில், சர்க்கார் காட்டி வந்த மனோபாவம்,—அதாவது இதுவரை விசாரணையின்றிச் சிறை வைத்திருந்த சுபாஷ் சந்திர போஸை யாரும் எதிர்பாராத நிலையில் திடீரென விடுதலை செய்தது; பாதுகாப்புகள் சட்டத்திற்கு அலங்காரமாக வைக்கப் பட்டிருக்கிறதே யொழிய, அவற்றை உபயோகிக்கும் உத்தேச மில்லையெனத் தெளிவுபடுத்தி விடவேண்டும் என்று இந்தியா மந்திரி கவர்னர்களுக்கு உத்தரவு பிறப்பித்ததாகச் செய்தி வந்தது; அரசாங்க சபையில் அதன் தலைவர் நடத்திவைத்த விருந்தின் போது வைஸ்ராய் காங்கிரஸ் வெற்றியைப் பாராட்டி, அவர்களிடம் சர்க்கார் கொண்டுள்ள கொள்கை இன்னதென ஒருவாறு விவரித்தது ஆகியவைகள்—இவ்வித நம்பிக்கைக்கு இடங்கொடுத்தது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும், சட்ட சபை யங்கத்தினர் மகாநாடும் முடிவடைந்து காங்கிரஸ் தலைவர்கள் அவரவர்களது ஊருக்குப் புறப்பட்டார்களோ இல்லையோ, பீஹார் சென்னை, ஐக்கிய மாகாணம் முதலிய மாகாணங்களின் கவர்னர்கள் காங்கிரஸ் கட்சித் தலைவர்களுக்கு அவசர அவசரமாக அழைப்பு அனுப்பிய தோரணையும், சர்க்கார் காங்கிரஸோடு ஒத்துழைத்து மந்திரி சபை யேற்படுத்த விரும்புகிறார்களென்று பொது மக்களை நம்பச் செய்தது.

இவ்வாறு அனைவரும் காங்கிரஸ்காரர்கள் மந்திரிபதவிகளை ஏற்பது திண்ணம் என்று எதிர் பார்த்துக் கொண்டிருக்கையில், திடீரென்று நிலைமை மாறுதலடைந்த தென்றால் அதை என்னவென்று சொல்வது! ஈசன் செயல் என்று கூறுது வேறென்ன சொல்ல முடியும்!

காங்கிரஸ் பெரும்பான்மையாக வந்துள்ள மாகாணங்களில் கவர்னர்கள் காங்கிரஸ் கட்சித் தலைவர்களை அழைத்து மந்திரி சபை யமைக்கும்படிகேட்டனர். அப்போது காங்கிரஸ் கட்சித் தலைவர்கள், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்தின்படி, கவர்னர்கள் தாங்கள் சட்டத்திற் குட்பட்டு பொது ஜனங்களுக்கு நன்மை யேற்படும் வகையில் செய்யும் காரியங்களுக்கு இடையூறாக விசேஷாதிகாரங்களை யுபயோகிக்கக் கூடாது என்று வாக்குறுதி யளிக்க வேண்டு மென்று கேட்டனர். ஆனால் கவர்னர்கள் அவ்விதம் வாக்குறுதி யளிக்க முன் வரவில்லை. கவர்னர்கள் காங்கிரஸ் மந்திரிகள் செய்யும் காரியங்களுக்கு வேண்டிய உதவி செய்வதாகவும், அநுதாபத்தோடு ஒத்துழைப்பதாகவும், ஆனால் விசேஷாதிகாரங்களை உபயோகிப்பதில்லை யென வாக்குறுதி கொடுக்க முடியாதென்றும், அதற்குச் சட்டம் இடந் தரவில்லை யென்றும் ஒரே மாதிரியாகக் கூறி விட்டார்கள். எனவே, காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் மந்திரி சபையை யமைக்கும் விஷயத்தில் கவர்னர்களோடு ஒத்துழைக்க முடியா தென்று கூறி விட்டார்கள். இவ்வித நிலைமையால், கவர்னர்கள் பாடு திண்டாட்டமாய் விட்டது. இரண்டொரு முறை சமரச முயற்சி நடந்தும் பயனில்லை. கடைசியாக கவர்னர்கள், மற்றக் கட்சியினரைக் கொண்டு தற்காலிகமாக மந்திரிகளை நியமித்திருக்கின்றனர். இவர்கள் இடைக்கால மந்திரிகள் அல்லது 'பினாமி' மந்திரிகள் எனப் படுவர்.

சென்னையில் காங்கிரஸ் கட்சித் தலைவரான ஸ்ரீ. ஸி. ராஜகோபாலாசாரியார் மந்திரிசபை யமைக்க மறுத்துவிடவே, கவர்னர் லார்டு எர்ஸ்கின் மிதவாதக் கட்சித்தலைவர்களில் ஒருவரான ரைட் ஆனரபிள் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரைக் கூப்பிட்டு மந்திரிசபை யமைக்கும்படி கேட்டுக் கொண்டார். அவர் மறுத்துவிட்டார். பிறகு, ஜஸ்டிஸ் கட்சி பிரமுகரும் ஆக்டிங் கவர்னரா யிருந்தவருமான ஸர். கே வி ரெட்டி நாயுடுவைக் கவர்னர் அழைத்தார். அவர் உடனே கவர்னர் விருப்பப்படி தம் தோழர்களைக் கொண்டு மந்திரி சபையை பின்வருமாறு அமைத்து விட்டார். ஸர் கே. வி. ரெட்டி பொது இலாகா, ரெவினியூ சட்ட இலாகாக்களின் மந்திரி; ஸ்ரீ. ஏ. டி. பன்னீர் செல்வம், உள் நாட்டிலாகா, நிதி இலாகாக்களின் மந்திரி; ஸ்ரீ எம். ஸி. ராஜா அபிவிருத்தி இலாகா மந்திரி; ஸ்ரீ குமாரராஜா முத்தையா செட்டியார் ஸ்தல ஸ்தாபன இலாகா மந்திரி, ஸ்ரீ ஆர். எம். பாலாட் சுகாதார இலாகா, கல்வி இலாகாக்களின் மந்திரி கான்பகதூர் பீ. கலீபுல்லா சாஹிப் பொது மராமத்து இலாகா மந்திரி; இவர்களுள் முதன்

மந்திரியான ஸர். கே. வி. ரெட்டிக்கு மாதச் சம்பளம் ரூ. 3000, மற்ற மந்திரிகளுக்கு மாதச் சம்பளம் ரூ. 2500. இவர்களுக்கு வீட்டு அலவன்ஸ் ரூ. 400 வேறு அளிக்கப்படும். இங்கு மேல் சபைக்கோ, கீழ்ச்சபைக்கோ தேர்ந்தெடுக்கப்படாதவரான ஸர். கே. வி. ரெட்டி மந்திரிசபை யமைத்ததும், ஹரிஜனத் தொகுதியில் நின்று வெற்றிபெற்ற ராவ்பகதூர் எம். ஸி. ராஜவைத் தவிர, மற்ற மந்திரிக ளெல்லாம் விசேஷத் தொகுதிகளில் வந்தவர்களாகவே இருப்பதும் கவனிக்கத்தக்கதாகும். இது போலவே, பீஹார் முதலிய மாகாணங் களிலும் விசேஷத் தொகுதிகளைச் சேர்ந்த சிறுபான்மையோர்தான் பெரிய சிரமத்தோடு மந்திரி சபை அமைத்திருக்கின்றனர். இந்த ஏழு மாகாண மந்திரிகளும் ராஜ விசுவாசப் பிரமாணஞ் செய்து ஏப் ரல் முதல் தேதியன்று பதவி ஏற்றுக் கொண்டனர்.

இந்த இடைக்கால மந்திரி சபையின் ஆயுசு நான்கு மாதம் அல் லது ஆறுமாதந் தான் நீடித்திருக்கும். சென்னை கவர்னர் தமது பெரு முயற்சியால் நிர்மாணித்துள்ள பிறுமி மந்திரிசபைக்கு எங்கு ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்று பயந்தோ என்னவோ, அரசாங்க சபையும், ஜனப் பிரதிநிதி சபையையும் இப்போது ஆரம் பித்து வைக்காது செப்டம்பர் மாதம் வரை தள்ளிவைத்து விட்டார்.

புதிய அரசியலின் சகாப்தத்தின் ஆரம்பம் இவ்வளவு அலங் கோலத்தில் துவக்கப்பட்டிருக்கிறது. புதிய அரசியல் சீர் திருத்த சட்டம் அமுலுக்கு வந்த ஏப்ரல் மாதம் முதல் தேதி யன்று இந் தியா வெங்கணும், மேற்படி சட்டத்தைக் கண்டித்து ஹர்த்தால் அநுஷ்டிக்கப்பட்டன. சில இடங்களில் இது சம்பந்தமாக, காங் கிரஸ்காரர் சிலர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

இப்போது ஏற்பட்டிருக்கும் அரசியல் நிலைமையைக்கண்டு சர்க் கார் அதிருப்தி யடைந்திருப்பதாகத் தெரிகிறது. காங்கிரஸுக்கும் தங்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தகராறைத் தீர்ப்பதற்கு ஏதாவது வழி செய்ய வேண்டுமென்று மிகவுங் கவலைப்படுகிறார்கள். இந்தியா வில் காங்கிரஸ் பெருமபான்மையாக வந்துள்ள ஆறு மாகாணங் களில் ஏற்பட்டிருக்கும் பெருத்த நெருக்கடியை யறிந்து லண்டனில் கூட பீதி யுண்டா யிருக்கிறதாம். அரசியல் பூர்வமான காரியங்களி லெல்லாம் கவர்னர்கள் மந்திரிகள் விருப்பப்படி நடந்து கொள்ள வேண்டு மென்று விதித்து, கவர்னர்களுக்குப் புதிய நியமனப்பத்திரம் ஒன்று இந்தியா மந்திரியால் அனுப்பப்படுமென்றும், காங்கிரஸ் கோரும் உறுதி மொழி கொடுப்பதையும் அப் புதிய பத்தி ரம் அனுமதிக்கு மென்றும் கூடிய சீக்கிரம் கூடப் போகும் பார்லி மெண்டு கூட்டத்தில் இப் பிரச்சினை சமர்ப்பிக்கப் படு மென்றும் பத் திரிகைகளில் வதந்தி யுலாவுகிறது. ஆண்டவன் செயல்! இப்போ துள்ள நெருக்கடியான நிலைமை எவ்வாறு மாறுகிறதோ பார்ப்போம்.

# சகோதர வாஞ்சை (அம்புநாதன்)

தம்பி அண்ணனைத் தந்தையாகவும் தேவதையாகவும் கருதி நடக்க வேண்டும் என்பது ஆன்றோர் அருளிய நீதி. அண்ணன் தன் தம்பியை தன் உயிராகப் பாவித்து அன்புபூண்டு ஒழுகவேண்டும். இராமனுடைய சகோதர வாஞ்சையை வாலி தன் தாரம் தாரைக்கு உரைக்குமிடத்து,

"தம்பிய ரல்லது தனக்கு வேறுயிர்
இம்பரி னிலதென வெண்ணி யேய்ந்தவன்"

இப்பூவுலகில் தம்பிகளைத் தவிர தனக்கு வேறு உயிர் இல்லையென்று ஆராய்ந்து துணிந்த இராமன் என்று இராமனை சிறப்பித்துக் கூறுகிறான்.

2. இலக்குவன் இராமனிடத்தில் எவ்வாறு சகோதர வாஞ்சை பூண்டு ஒழுகினன் என்பதை கவனிப்போம். இராமனைக் கண்டவர்கள் இராமனுக்கு தம்பி உண்டு என்று அவனை விசாரிக்காது தெரிந்துகொள்ளலாம். இலக்குவன் நீங்காது எப்பொழுதும் பக்கத்திலிருந்து கொண்டிருந்ததால் இராமனுக்கு தம்பி உண்டென்று இராமனைப் பார்த்தவர்கள் எளிதில அறிந்தார்கள். இலக்குவன் தாயாகிய சுமித்ரா தேவியை பரதாழ்வான் குகப்பெருமானுக்கு உணர்த்துமிடத்து,

"இராமனுக்குப் பின் பிறந்தானு முளனெனப் பிரியாதான் தாய்"

என்று வர்ணிக்கிறார்.

3. கைகேசியின் சூழ்ச்சியினால் இராமன் தனக்கு கொடுக்கப்பட்ட அரசை இழந்தார் என்றும் கானகத்திற்கேக வேண்டுமென்று அவள் தசரதனிடம் வரங்கள் பெற்ற செய்தி தனக்கு தெரியவந்தவுடன் கோபாவேசங் கொண்டு கைகேசியையும தசரதனையும் கொன்று விடுவதாக இலக்குவன் யுத்தத்திற்கு எழுந்தான். அது தெரிந்த இராமன் தம்பியை அணுகி விதி வலிது என்று நீதியைக் கூறிய காலத்து அண்ணன் கருத்துக்கு மாறுபட அஞ்சி தன்னுடைய வாஞ்சையைத் தெரிவிக்கிறான்.

"நற்றாதையுநீ தனிநாயகனுநீ வயிற்றிற்
பெற்றாயுநீயே பிறரில்லை"

இராமனைப் பார்த்து இலக்குவர் அவர் தனக்கு நன்மை நல்கும் தந்தை என்றும், ஒப்பற்ற தலைவன் என்றும் ஈன்றெடுத்த தாயென்றும் தனக்கு வேறொருவர் உலகத்தில் உற்றவரில்லை யென்றும் அதனால்தான் இராமனுக்கு கீழ்ப்படிவதாக கோபத்தைத் தவிர்த்தான்.

4. இலக்குவன் பூமியில் வில்லை யூன்றிக்கொண்டும் துக்கத்தினால் பெருமூச்சு விட்டுக்கொண்டும் கண்களை இமைக்காமல் விழித்துக்கொண்டு இரவு முழுமையும் இராமனும் பிராட்டியும் புற்றரையில் துயிலுணர மருங்கே நின்று காவல் புரிந்தான்.

"அல்லையாண் டமைந்தமேனி யழகனு மவளுந்துஞ்ச
வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்

கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவுநின்று னிமைப்பிலன் யனமென்றான்"

இப் பாசுரத்தில் குகப்பெருமான் இலக்குவன் காவலை பரதாழ்வாருக்கு தெரிவிக்கிறான். இராமன் எவ்வண்ணம் இலக்குவனிடத்தில் வாஞ்சை காட்டினாரென்று கவனிப்போம். சுக்ரீவன் அண்ணனுக்குத் துரோகி. அவன் போர் நியாயம் அன்று என்று இலக்குவன் இராமபிரானிடம் உணர்த்திய போது அவர் மாற்றாந்தாய் வயிற்றிலோ ஒரே தாய் வயிற்றிலோ பிறந்தவர்கள் சகோதர வாஞ்சையில் பரதனுக்கீடாக மாட்டார்கள் என்றும், அவர்களிடம் சகோதர வாஞ்சை இருக்குமானால் பரதனுடைய சகோதர வாஞ்சைக்கு மேன்மை கிடையாதென்றும் விலங்கினமாகிய குரங்குகளுக்குள் ஒழுங்கீனம் இருப்பது இயல்பு என்றும் இராமன் விடை பகருமிடத்து இலக்குவனை இராமன் "அப்பா" என்று விளிக்கிறார்.

"அத்தாவிது கேளென வாரியன் கூறுவானிப்
பித்தாய விலங்கி னொழுக்கினைப் பேசலாமோ
வெத்தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்க ளெல்லா
மொத்தார் பரதன் பெருந்தத்தம ஞதலுண்டோ"

இலக்குவன் இராமனுக்கு தசரதனாக விளங்கினான். எல்லையற்ற அன்பு இராமனிடம் பாராட்டி கன்றைக் காக்கும் தாய்ப்பசுபோல் இராமனைக் கண்ணுங்கருத்துமாய் கவனித்து வந்தான். இந்திரஜித் ஏவிய நாக பாசத்தால் இலக்குவன் பிணிக்கப்பட்டு மூர்ச்சையாகி கிடந்தகாலத்து இராமன் பெருமூச்செறிந்தார். உயிரும் உணர்வும் சோர்ந்தார். என்ன செய்வது என்று தெரியாது திகைத்தார். இலக்குவன் வாயிலும் மூக்கிலும் கையை வைத்து சுவாசத்தின் அடையாளம் ஏதேனு மிருக்கிறதாவென சோதித்து, "இலக்குவா நீ பிழைப்பாயா" என்று கதறினார்.

5. பரதாழ்வான் சகோதர வாஞ்சைக்கு எல்லைக்கல். கேகய நாட்டிலிருந்து பரதாழ்வான் அயோத்திக்குவந்து தன் தாயின் சூழ்ச்சியினால் இராமன் கோல் துறந்து, நகர் நீங்கி கானகம் சென்றார் என்று தெரிந்துகொண்டவுடன் ஆற்றொணுத் துயரமடைந்தார். தன்னுடைய தாயும் தந்தையும் கடவுளும் அண்ணனுமாகிய நற்குணங்களுக்கு உறைவிடமாகிய இராமனை தான் காட்டிற்குச் சென்று வணங்கினாலொழிய தன் துயர் நீங்காது என்று காட்டிற்குப் புறப்பட்டார்.

"எந்தையும் யாயு மெம்பிரானு மெம்முனும்
அந்தமில் பெருங்குணத் திராம ஞதலால்
வந்த னையவன் கழல்வைத்த போதலாற்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலா தென்றான்"

சகோதர பிரிவாற்றாமையினால் மரவுரி உடுத்தார். ஜடையைத் தரித்தார்; சுகத்தைத் துறந்தார்; முகம் ஒளி இழந்தது; மனம் நைந்து உருகியது.

தசரதன் தனக்கு அரசு கொடுத்தால் மூத்த மகனுக்கே முடிசூட்டும் குலாசாரத்திற்கு மாறுதலாக நடந்து பழிக்குள்ளாவேனென்று ஏங்கினார். இராமன் திருவடிபட்ட தென்திசை பாக்யம் செய்த திசையென அதை மீண்டும் நமஸ்கரித்தார். இராமனை அயோத்திக்கு அழைத்துவர சித்ரகூட பர்வதத்திற்கு புறப்பட்டார். இராமன் துயிலுணர்ந்த இடத்தைக் கோயிலெனக்

கருதி அதை வலம்வந்து கண்ணீரால் அபிஷேகம் செய்தார். தன்னை மொர்ந்து கொண்டார். இராமனுடைய இன்னுயிர்த் துணைவன் குகனுல் அவனைத்தான் முதன்முதலில் கண்டு வணங்க வேண்டுமென்று கடுகிச் சென்ருர். சென்னிமீது கரங்களைக் குவித்து கண்ணீர் ஆருய்ப் பெருக துக்கம் என்னும் சித்திரம் நடைபெயர்ந்து சென்றதுபோல் சித்ரகூட பர்வதத்தி லிருந்த இராமனை அணுகினுர். எவ்வளவோ மன்ருடி இறைஞ்சியும் இராமன் நாட்டிற்கு வர மறுதலித்து பரதாழ்வானை ஆளும்படிக் கட்டளை யிட்டார். பரதாழ்வான் கோரியபடி திருவடித்தலம் இரண்டையும் வழங்கினுர். பரதன் இராமன் பதினுன்காவது ஆண்டு கழிந்தவுடன் அயோத்திக்கு வந்து செங்கோல் செலுத்த வேண்டுமென்றும் இல்லாவிடில் தான் தீக்கிரையாவதாகவும் இராமன் பேரில் ஆணையாக சபதம் செய்தான். சகோதர வாஞ்சை பொங்கி வழியும் அச்செய்யுள் பின்வருமாறு,

“ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் செடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச்
சாமிது சரத நின்னுணை சாற்றினேன்”

குகப்பெருமான் பரதாழ்வானுடைய உறுதியை வியந்து “ஆயிரம் இராமர் நின்கேழாவரோ தெரியில் அம்மா” என்று எத்தித் துதிக்கிருன்.

6. சத்ருக்கனனுடைய சகோதர வாஞ்சையை ஆராய்வோம். இலக்குவன் இராமனை விட்டகலாது பணிவிடை இயற்றிக்கொண்டிருந்ததுபோல் பரதாழ்வானுக்கு மருங்கில் எப்போதும் இருந்துகொண்டு குற்றேவல் செய்துகொண்டிருந்தான். குகப்பெருமான் பரதாழ்வானையும் பக்கத்திலிருந்த சத்ருக்கனனையும் பார்த்து,

“நம்பியுமென் நாயகனை யொக்கின்ரு னயனின்ருன்
தம்பியையு மொக்கின்ருன்”

என்று வியந்து கூறினுன். பதினுன்காவது வருஷம் முடியும் சமயம் வந்துவிட்டது. ஆவலோடு எதிர்பார்த்திருந்த இராமன் வரவில்லை. தீமூட்ட பரதன் உத்தரவிட்டான். சத்ருக்னனைப் பார்த்து நான் தீக்கிரையாகிறேன்; நீ அரசை ஏற்றுக்கொள் என்று அழுதுகொண்டே தம்பியிடம் வரம் வேண்டினுன். அதற்கு சத்ருக்கனன் பின்வரும் சகோதர வாஞ்சை ததும்பும் அருமையான செய்யுளின்படி,

“கானுள நிலமகளைக் கைவிட்டுப் போவானைக் காத்துப் பின்பு
போனுனு மொரு தம்பி போனவர்கள் வருமவதி போயிற்றென்று
ஆனுதவுயிர்விட வென்றமை வானுமொரு தம்பியயலே நானு
தியானு மிவ்வரசாள்வென வென்னே யிவ்வரசாட்சி யினிதே யம்மா.”

இராமபிரான் அரசை நீத்து காட்டிற்கு சென்றபோது தொடர்ந்து சென்ருன் இலக்குவன். இராம இலக்குவர்கள் குறித்த கெடுவில் வரவில்லையென்று அருமையான ஆவியை நீ துறக்கிருய். வெட்கமில்லாமல் உன் பக்கத்திலிருக்கும் மற்றொரு சகோதரனுகிய எனக்கு இந்த அரசியல் விருப்பமா? நான் உனக்கு முன் தீக்கிரையாவனே அல்லாது அரசையும் ஆவியையும் பொருட்படுத்தாத தியாகிகளுக்கு உடன்பிறக்கும் பாக்கியம் வாய்த்த நான் அரசையும் உயிரையும் சுமக்கமாட்டேன் என்று விடை பகர்ந்தான்.

# வள்ளுவரும் சிவப்பிரகாசரும்

(K. V. சிவசுப்பிரமணியன் B. A.,)

பொய்யில் புலவரின் பொருளுரையைப் பொன்னேபோல் போற்றித் தத்தம் நூலுள் ஆண்டுள்ள புலவர் பலர். அத் தகைய புலவர்களுள் முற்காலப் புலவரை விடுத்து பிற்காலப் புலவர்களுள் ஒருவராகிய துறைமங்கலம் சிவப்பிரகாச வள்ளலார் திருக்குறளினின்றும் எடுத்தாண்டுள்ள பொன் மொழிகளை ஒரு சிறிது ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாம். சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் பெயர்பெற்றுத் திகழ்ந்தோர் பலர். அவர்களுள் நமது ஆராய்ச்சிக்கெடுத்துக் கொள்ளப்பட்டவர் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளாவர். இவர் தான் முதன்முதல் சிவப்பிரகாசர் என்னும பெயருடன் தமிழ்நாட்டில் திகழ்ந்தவர். இப் புலவர் பெருமான் தொண்டை நாட்டின் கண்ணே சிறந்து திகழும் கச்சியம் பதியென வழங்கும் காஞ்சிபுரத்திலே இற்றைக்குச் சுமார் இருநூறறெண்பது ஆண்டுகட்குமுன் வீரசைவ சமயம் வீறுற்றோங்க அவதாரம் செய்தருளினர். அவர் தந்தையாருக்கு அம்மையப்பர் அருளால் அரும்புதல்வர் மூவரும் புதல்வி ஒருத்தரும் பிறந்தனர். யாவருள்ளும் சிவப்பிரகாசரே மூத்தவர். அவர் காஞ்சியம்பதியை நீத்து சிலகாலம் அருணகிரியில் வதிந்து அளப்பருந் தமிழ் இலக்கியங்களை அறுதியிட்டறிந்து அவற்றிலுள்ள நுணுக்கங்களை மனதிலே பதியவைத்துக்கொண்டு அவற்றின் சுவைகளை எண்ணிச் சுவைத்தார். இலக்கிய அறிவு மேன்மேலும் மிகப்பெற்ற இறையொளியார் இலக்கணமும் யாப்பியலும் அறிந்து செய்யுளியற்றும் போற்றல் படைத்தார். பின்னர் பலதலங்களையும் தரிசித்துவிட்டு செந்திலம்பதியை யடைந்தார். அங்கே அலையெறி வாயிலில் கன்மனத்தையுங் கரைக்கும் ஆற்றல் அமைந்த அருங் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் அருட்கடலாகிய ஆறுமுக அமுதை ஆர்வம் மிக்க கண்களால் கண்டு அளப்பரும் இன்ப ஆழியில் திளைத்தார். இங்ஙனம் சைவ நெறி தழைத்தோங்கிய பலதலங்களையும் தரிசித்த பின்னர் துறைமங்கலம் என்னும் பதியையடைந்து அதனைத் தம்வாணாளின் இருக்கையாக் கொண்டனர். (இவ்வூர் திரிசிராப்பள்ளி ஜில்லா பெரம்பலூர் தாலுக்காவிலுள்ளது) இப் பெரியார் பொம்மபுரம் (புதுவைக்கு 8 மைல் தூரத்திலுள்ளது) சிவஞான பாலைய சுவாமிகளை ஞான குரவராகக் கொண்டு தீக்கைபெற்று வீரசைவ சித்தாந்தப் பெருங்கடலை கரை கண்டுணர்ந்தார். இவரும் இவர் தம் உடன் தோன்றலா ரிருவரும் சேர்ந்து முப்பத்திரண்டு நூல்கள் இயற்றியுள்ளனர் என்பது ஒரு தனிப் பாடலால் விளங்குகிறது. அவைகளுள் சில வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்க லீலை, வெங்கைக் கலம்பகம், இஷ்டலிங்க அபிஷேக மாலை, சதமணி மாலை, நன்னெறி முதலியன. மேற்கூறப்பட்ட நூல்களிலுள்ள செய்யுள்கள் கற்பனை நயம் சிறந்தன. சிவப்பிரகாச அடிகளின் சிறப்புப் பாடமைந்த கவிகளை சிறிது நேரம் சிந்திப்பார்க்கு சிந்தையிலெழும் இன்பவூற்றின் மாண்புதா னென்னே! அதுபற்றியன்றே அவர் புலவர் குழாத்திடையே "கற்பனைக கவிஞன்" "கற்பனைக் களஞ்சியம்" என்னும் சிறப்புப் பெயர்கள் பெற்றுள்ளார். சிவப்பிரகாசரது செய்யுள்களில் குறட் கருத்து மலிந்து கிடக்கும் ஒரு சிலவற்றை கீழே தர விரும்புகிறேன்.

சிதாகாசப் பெருவெளியாம் சிதம்பரத்தை யடைந்த சிவப்பிரகாசர் சிற்றம்பலத்தே நடன சிகாமணியை நினைந்துருகி ஆங்குள்ள சமய குரவர் நால்

வரின் அருட்பெருக்கினை யுன்னி யுன்னி உள்ளங்குழைந்து நால்வர் நான் மணிமாலை எனும் நூலை அருளிச் செய்தார். அருள்நலஞ் சிறந்த அப் பாடல் கள் பொருள்களி சிறந்தனவே. அந் நூல் 28ம செய்யுள் வருமாறு:—

"பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறுாி னழுங்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பை நீயே
பேயேன் பெறுது பெற்றூர் போலக
களி கூர்ந்துள்ளக் கவலை தீர்ந்தேனே
அன்னமாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூரனன்ப வாத லாலே
தெய்வப்புலமைத் திருவள்ளுவனார்
"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மில" ரெனும்
செஞ் சொற்பொருளின் றேற்றறிந்தேனே"

இப் பாடலில் "நன்றறிவாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத்தவல மிலர்"

என்ற குறளை எடுத்தமைத் திருத்தல் காண்க. அதே நூலில் 33ம் செய்யுள் வருமாறு:—

"அறத் தாறிதுவென வேண்டா சிவிகை
பொறுத் தானோடூர்ந் தானிடை"யை—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றூர்ந்துஞ் சிவிகையினை யூர்ந்து."

மேற் பாடலில் "அறன் வலியுறுத்தல்" என்னும் அதிகாரத்து ஏழாவது குறள் திரிபின்றி முற்றிலும் அமைக்கப்பட் டிருக்கிறது.

வெங்கையம் பதியில் வீற்றிருந்த கங்கைவார் சடையானை "பழமலைநாதர் பிச்சாடன நவமணி மாலை" என்ற நூலால் அடிகள் துதித்தார்.

"நங்குற்றம் தீர்க்கும பழமலைநாதர்க்கு நற்பலிகொண்
டங்குற்று மென்றுகில் போக்கினள் வெற்றரை யாகியந்தோ
விங்குற்றனையென வெம்பெருமா னிவ்வுரு நிலத்திற்
றங்குறறம பார்க்கு மவருளரோ வெனத் தாழ்ந்தனளே,"

என்பது அந் நூலின் முதற்செய்யுள். அதில் "புறங் கூறாமை" அதிகாரத்து இறுதிச் செய்யுளாகிய

"ஏதிலார் குற்றமபோற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு"

என்ற குறட்கருத்து பயின்றிருத்தல் காண்க.

"இனி சிவப்பிரகாசரின் சீரிய சித்தாந்த நூலாகிய பிரபுலிங்க லீலையில் வள்ளுவர் வாய் மொழி எங்ஙனம் ஆளப்பட்டுள்ள தெனக் கவனிப்போம். மூசகண் வல்லலாரொடு குளூற்ற உமாதேவி அங்கண்மா ஞாலத்தில் அல்ல மனைக் காண்பான் மாயையை விடுவித்தனள். மாயை வந்துதித்த நாட்டின் மாண்பினை விளக்கப்புகுந்த அடிகள்

"பொறைக் கயிற்றிற் புகழைபின் சொல்லெனும்
விறற்கயிற்றின் விருந்தைக் குரவர் சொன்
மறைக்கயிற்றின் மனத்தைத் திருவைநல்
லறக் கயிற்றி னசைப்பவ ரொன்றுமே. என்றார்

இப் பாடலும் "ஒறுத்தார்க்கு ஒரு நாளை யின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்" "அறசதினூஉங் காக்கமுமில்லை யதனை மறத்தலினூஉங்கில்லை கேடு" என்ற குறட்பாக்களும் ஒப்பு நோக்கற் குரியன. பின்னர்,

"இரப்பார் வரினோடி ஞால மெளிய தன்றிக்
கரப்பார் கரக்கும் பொருளன்றென வீகை கற்றே
யுரைப் பாருரைக்கு முறையாவும் புகழில் வைத்தோன்
தரைப் பாலுவமை யிலையாகத் தருக்கிவாழ் வோன்."

என்று மாயை பிறந்த வனவசை (Banavasi) மா நகரத்தின் வள்ளன்மையை வருணித்தார். அப் பாடல்,

"உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்"

என்ற பொய்யா மொழியின் பொழிப்பே யாகும். மாயை வளர்தற் சிறப்பைக் கட்டுரைக்கப் புகுந்த ஆசிரியர்,

"குழலும்யாழு மினியவெனக் கூறுவண்ணமென் கனிவாய்
மழலைமொழிந்து முடற்கின்ப மருவவோடி மேல்விழுந்தும்
விழையு மமிழ்தின் மிகவினிமை விளைய நுகருஞ் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாள் மோக மீன்றோரை."

என்றார். அவ்வொரு பாடலில்,

"குழலினிது யாழினி தென்பர் தம் மக்கண
மழலைச் சொற் கேளா தவர்"

"மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு."

"அமிழ்தினு மாற்ற வினிதே தம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

என்ற மூன்று குறள்களின் சொற்கள் அமைந்திருக்கின்றன. நிமல னடியார் வேண்டும் வினைவெலாம் நிரப்பா நின்ற பெருந் தகையாம் அல்லமப் பிரபு தேவர் மண்ணுலகில் தோன்றி மாயையை வென்ற வரலாறு பின்னர்க் கூறப்படுகின்றது. அப் பகுதியில் 56-ம் பாடல்,

"காலையருபிப் பகலெல்லாம் போதாயிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொருமமொருமாலை நாம மணிவல்லி
மூலையிருந்து புறம்போந்து விரிவெண்ணிலா மென்முற்றத்திற்
பீலிமஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்."

என்பதாம். அது "பொழுது கண்டிரங்கல்" என்ற அதிகாரத்து ஏழாவது குறளின் சொற்களே யாகும். விமலைகதி 36-ம் செய்யுளாகிய

"ஆன்றமயல் செய்லாகயோகத் தன்றித்தவ யோகத்தினு
லீன்றபொழுதிற் றன்மகனை யிருந்து சான்றோ னெனக் கேட்டுத்

தோன்று மூவகைக் கடற்படிந்தாள் சுஞ்ஞானித்தாய் பசும் பொன்மலை
போன்று வளர்ந்து மருங்குன் மிடிபோக்க வறியா வினை மூலையாய்."

என்றதில், "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனை
சான்றோ னெனக்கேட்ட தாய்"

என்ற குறட் கருத்து பொலிவுற் றிலங்குகின்றது. அரனடியர் பால் அன்பு பூண் டொழுகிய அக்கமா தேவியின் சரிதத்தில்

"பூங்கொடி யனைய மாதாம்பிகை..........................................
..........................................................................
தாங்குறவ வடன் வயிற்றிடையதனுற் றக்கவர் தகவிலரென்ப
தாங்கவர் பயந்த புதல்வனாற் றெளிய வறிமி னென்றறைதுவர் பெரியோர்"

என்ற பாடல் "தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தார் காணப்படும்"

என்ற குறளின் கருத்தேயாகும். அவ் வம்மையாரது துறவு கதியில்,

"உறையில் வாளோடு மாவழங்குறு வனத்தோடி
மறவனோர் பொருட்டுகென விரத்சலமானும்
இறைவன் வாழ்குடி தன்னி லொன்றொரு பொருளிரத்த
லறவனாகிய நீ யிதை யறிந்திலை யந்தோ" என்ற பாடலின் கருத்து

"வேலொடு நின்றானிடு வென்றது போலுங்
கோலொடு நின்றா னிரவு."

என்ற குறளைத் தழுவியதே யாகும். சித்தராமையர் கதியில்

"ஓங் கிரு வினைகளு மொப்பக் கண்டவர்
தாங்க ளொன்றனை யெரோ தமரிற் பேணுவ
ராங்கவை யிரண்டையு மடைந்து போயுழ
னீங்க ளென்றனை யுணர் நெறியிலீ ரென்றான்." என்ற செய்யுளில்

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

என்னும் திருவள்ளுவர் கூறிய வேதாந்தப் பொருள் அமைந்திருத்தல் காண்க. அதே கதியில்"

"அகழ்கின்றார் தமைத் தாங்குறு மகனில மென்ன
விகழ்கின்றார் தமைப் பொறுக்கு மித்தன்மை யெய்தலினு
னிகழ்கின்றா ருண் மாதவ முடையோகி நீயென்று
புகழ்கின்றனெனை விகழ்ந்தனன் பின்னரும் புகல்வான்"

என்ற செய்யுளை "அகழ்வாரைத் தாங்கும் நிலம்" என்ற குறளோடு ஒப்பிடுக. மற்றும்

"தன்னைக் கொல்லினுந் தான் பிறிதொன்றினைக் கோறல்
பன்னிற் பாவமென் றறைகுவர் கற்றுணர் பழையோர்" என்ற

42-ம் பாடல், 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை."

என்ற குறளடியைத் தழுவியது. இங்ஙனம் சிவப்பிரகாச அடிகள் வள்ளுவர் வாய்மொழியை தம் நூலுள் ஆங்காங்கே எடுத் தாண்டிருக்கிறார்.




சமீபத்தில் செகோஸ்லோ வாசியாகிய நிபுணரொருவர் ஒரு லட்சம் வருஷத்துக்கு முன்னிருந்த மனிதமூளை யொன்றைக் கண்டெடுத் திருக்கிறாராம்.

* * * *

பச்சோந்தி தன் உடம்பின் நீளத்தை விட அதிகமாகத் தன் நாக்கை நீட்டுமாம்.

* * * *

**மீன்களுக்கு ஆஸ்பத்திரி.**

பெர்லினில் மீன்களுக்காக வென்று ஒரு ஆஸ்பத்திரி கட்டப் பட்டிருக்கிறதாம்.

* * * *

**கைதிகளுக்கு விமானப் பயிற்சி.**

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் உடாஹோ என்னு மூரில் சர்க்கார் கைதிகளுக்கு ஆகாய விமானம் ஓட்டுவதற்குக் கற்றுக் கொடுக்கிறார்களாம்.

* * * *

**கனவுகளையும் படம் பிடிக்க கருவி.**

தூங்கும் பொழுது காணும் சொப்பனங்களைப் படம் பிடிப்பதற்காக கருவியொன்று கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. அக் கருவியைத் தலையில் மாட்டிக் கொண்டு தூங்கினால் அது கனவுகளைப் படம் பிடித்துவிடுமாம்.

* * * *

**மூன்றடி யுயரமுள்ள 800 குள்ளர்கள்.**

மஞ்சுகோவில் ஒரு கிராமத்தில் 800 குள்ளர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவராவது மூன்றடிக்கு மேல் உயரமில்லை.

* * * *

**மணியடிக்கும் மோட்டார் டயர்.**

இங்கிலாந்தில் மோட்டாரின் சக்கரங்களில் காற்று குறைந்து விட்டால், அது மோட்டார் டிரைவருக்குத் தெரிவதற்காக, புது விதமான டயர்கள் கண்டு பிடிக்கப் பட்டிருக்கின்றன. அந்த டயர்களில் மணி ஒவ்வொன்றும் சேர்க்கப் பட்டிருக்கின்றனவாம், சக்கரத்தில் காற்று குறைந்தால் அந்த மணி தானாகவே அடித்துக் கொள்ளுமாம்.

* * * *

**வானத்தில் ரயில் வண்டிகள்.**

வால்ட்னர் என்ற ஒரு இஞ்சினீயர் வானத்தில் ஒற்றைத் தண்டவாளங்களை யடைத்து இரண்டு ரயில் வண்டிகளை கோத்து ஓட்டுகிறாராம். இரு வண்டிகளும் பலமான இரும்புச் சட்டத்தில் பிணைக்கப் பட்டிருக்கின்றன. ஒரு சட்டத்தைத் தண்டவாளத்துக்குக் குறுக்காகப் பூட்டி ஒவ்வொரு வண்டியிலும் 5[illegible]0 குதிரை வேகமுள்ள டீஸல் இஞ்சினை வைத்து ஓட்டினால் அந்த ரயில் மணிககு 185 மைல் வேகம் ஓடுகிறதாம்.




சீன தேசத்திலுள்ள மக்கள் வெட்டுக் கிளியைக் கூட தின்கிறார்களாம்.

* * * *

காகிதம் செய்யும் மிஷின்கள் நிமிடமொன்றுக்கு ஒரு மைல் நீளம் காகிதத்தை யுற்பத்தி செய்கின்றனவாம்.

* * * *

பசும் பாலைவிட கழுதைப் பால் சீக்கிரம் ஜீரணமாகுமாம். எனவே பல நாடுகளில் குழந்தைகளுக்குக் கழுதைப் பால் புகட்டப் படுகிறதாம்.

* * * *

லண்டனில் ஸ்பெயின் சர்க்கார் ஒரு பொருட் காட்சி யேற்படுத்தி யிருக்கிறார்கள். கலகக்காரருக்கு 'பாஸிஸ்டு' வல்லரசுகள் கொடுத்த வெடிகுண்டுகளின் துண்டுகள் அங்கே வைக்கப் பட்டிருகின்றனவாம்.

* * * *

உலகில் 4,500 விதமான புற்கள் இருக்கின்றனவாம்.

* * * *

சூரியகாந்திப் பூவிலிருந்து ரப்பர் செய்யப் படுகின்றதாம்.

* * * *

உலகிலேயே 62,349 ஆகாய விமானங்கள் இருப்பதாகவும், அவற்றில் மூன்றில் இருபங்கு யுத்த விமானங்களே காணப் படுவதாகவும் அமெரிக்காவில் கணக் கெடுக்கப்பட்டிருக்கிறது.

* * * *

'பின்னர்' என்ற ஒருவகையான திமிங்கலம் நாள் ஒன்றுக்கு ஒரு மனிதனின் எடையளவு வளர்கிறதாம்.

* * * *

குற்றஞ் செய்வது ஒருவித மனோவியாதி யென்றும், மற்ற வியாதிகளைப் போல் இதையும் குணஞ் செய்யமுடியும் என்று லண்டன் நிபுணர்கள் கூறுகிறார்கள்.

* * * *

அமெரிக்க ஐக்கிய மாகாணத்திலுள்ள போர்ட்லந்தில் உலகிலேயே மிக உயரமான மாடிப் படி யொன்று இருக்கிறதாம். இதன் உயரம் 670 அடி யெனக் கூறப் படுகிறது.

* * * *

கள்ளிலிருந்து எளிதாகச் சாராயஞ் செய்யும வழியை, சிங்களப் பாதிரியான தாமஸ் என்பவர் பல வருஷங்கள் ஆராய்ச்சிசெய்து கடைசியாகக் கண்டுபிடித் திருக்கிறாராம்.

# ஆபுத்திரன் வரலாறு

(பே. ராமாநுஜம்.)

## 4 கோலேஞன் கோற்றவன் ஆனமை

மணி பல்லவம் என்னும் தீவையடைந்து புண்ணியராசன் வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருந்த மணிமேகலை அரசன் அங்கு அடைந்ததை யறிந்து, எதிர் சென்று அழைத்து அத்தீவை வலம்வரச் செய்தாள். அப்பொழுது அதன் இயற்கையழகை அரசனுக்கு ஒவ்வோரிடமாகக் காட்டி வந்தாள். கடலின் பேரலையாலும், காற்றாலும ஒதுக்கப்பட்ட வெள்ளிய மணற் குன்றுகள் சர்க்கரைக் குவியல் போல் பொலிந்தன. புத்த தேவனது பாதபீடிகை அங்கு இருப்பதை நெடுந் தூரத்தில் வசிப்பவரும் அறிந்து உய்வதற்கு என நிறுவப்பட்ட தருமத் தூண்கள்போல் தென்னை மரச் செறிவும், பனைமரச் சாலையும் விளங்கின. களங்கமற்ற பளிங்குபோல் நீர் நிலைகள் பல அங்கங்கே இருந்தன. அவற்றில் ஆம்பல் குவளை முதலிய கொடிகள் படர்ந்திருந்தன. அக் கொடிகளில் மலர்ந்துள்ள அழகிய பூக்களில் படிந்து வண்டுகள் இன்னிசை யெழுப்பின. அன்னமும், கொக்கும், உள்ளும், ஊரலும், கம்புட் கோழியும் இன்னும் பலப்பல பறவையினங்கள் அந் நீர் நிலைகளில் தவழ்ந்தும் பறந்தும் ஒலித்தன. நீர்நிலையின் கரையில் நிறைந்து வளர்ந்த தாழையின் மலர்கள் மணம் வீசி நின்றன. தருமராசன் இருந்து அறம் உரைத்த பீடிகை தன்னிடம் உள்ள மேன்மையால், அத்தீவு முழுவதும் தருமம் நிறைந்து பொலிவது போல் பவளக் கொடிகள் படர்ந்து விளங்கின. இத்தகைய காட்சிகளை மணிமேகலையும் புண்ணிய ராசனும் கண்டு மகிழ்ந்து பாதபீடிகை இருக்கும் இடத்தை யடைந்தனர்.

அங்குள்ள அமைதியையும் அழகையும் என்னவென்று சொல்வது? அப் பீடிகையைச் சூழ்ந்துள்ள புன்னை முதலிய மரங்கள் நல்ல மலர்களையன்றிப் பிறவற்றை அதன்மேல் சொரியா; பறவைகள் அதன் பக்கத்தே சென்று சிறகொலியை எழுப்பா; காற்றும் அங்கு இரைந்து வீசாது. அக் காலத்தில், புத்ததேவன் அதன் மீது அமர்ந்து, அனைவர்க்கும் தருமோபதேசம் செய்தபொழுது நிலவிய அமைதியே அன்று நிலவியது; புண்ணிய ராசன் நிலத்தில் விழுந்து தாழ்ந்து வணங்கி, இரு கரங்களையும் சிரமேற் கூப்பி, மெய்மயிர் பொடிப்ப உள்ளம் நெக்குருகப் பின் வருமாறு போற்றலுற்றான்:—

"ஒளியாகி உலகாகி நீவிரிந்தாய் என்கோ!
உலகெலாம் நின்னடியின் உள்ளடங்கிற் றென்கோ!
அளியார உலகம்நீ ஆள்கின்றாய் என்கோ!
அமரர் உலகு தாள்நின்ன தடியடைந்த தென்கோ!
விளியாத மெய்ப்பொருளை நீ விரித்தாய் என்கோ!
நீ விரித்தவாறே மெய்ப் பொருள் விரிந்த தென்கோ!

தெளியாமல் இல்லையின் திருவடிகள் மெய்மை!
தெளிந்தாலும் செவ்வனே தெரிந்துரைக்க லாமோ!

"ஆரமிழ்தம் மணிநாகர் குலம்உய்ய அருளினையே!
வார்சிறைப் புள்அரையற்கும் வாய்மைநெறி பகர்ந்தனையே!

"எறும்புகடை அயன்முதலா எண்ணிறந்த எவ்வுயிர்க்கும்
பிறந்திறந்து யோனிதொறும் பிரியாது சூழ்போகி
எவ்வுடம்பில் எவ்வுயிர்க்கும் யாதொன்றால் இடரெய்தின்
அவ்வுடம்பில் உயிர்க்குயிராய் அருள்பொழியும் திருவடிகள்!"

இங்ஙனம் பற்பலவாறு துதித்து நிற்கையில், குற்றமில்லாத கண்ணாடி தன்னைப் பார்ப்பவர் முகத்தைத் தெளிவாகக் காட்டுவது போல பாத பீடிகையை வணங்கி நின்ற புண்ணிய ராசன் மனதில் அவனது முற்பிறவி யின் வரலாறு அனைத்தும் அப் பீடிகையின் காட்சியால் நன்கு புலனாயிற்று! அவ்வளவில் அவன் தனது முற்பிறவியில் நிகழ்ந்த இன்ப துன்பங்களின் நினைவு எழ, தனக்குத் தானே பின்வருமாறு பேசத் தொடங்கினான்.

"பொன்னிறமான கொம்பும் குளம்பும் வாய்ந்து, மக்கள் பலரும் தொழுது ஏத்த விளங்கிய தெய்வத் திருப்பசுவே! உனது அருட்செயலை அன்புப் பெருக்கை எவ்வாறு விரித்துரைப்பேன்! இப் பிறவியில் என்னை ஈன்றதல்லாமல் சென்ற பிறவியிலும் எனக்குத் தாயாக விளங்கியவள் நீயல்லவா? வாரணசியில் வாழ்ந்த சாலி யென்னும் பார்ப்பனச் செல்வி குமரியாடச் செல்கையில் என்னை வழியிடையே ஈன்று, சிறிதும் இரக்க மின்றி என்னை அவ் விடத்திலேயே எறிந்து போக, நீயன்றோ அப்பொழுது உனது பாலமுதம் ஊட்டி என்னை வாழ்வித்தாய்! இளம்பூதி யென்ற அந்தணனால் அடியேன் அன்புடன் வளர்க்கப் பட்டேனாயினும், இடையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தால் அவனும் என்னை விலக்கி விட்டான். ஐயோ! அந்தக் கொடுமைக்கு—வேள்வியென ஒன்றை ஏதுவாகக் கொண்டு சாந்த வடிவை—அருள் உருவை—தெய்வப் பசுவைக் கொலை செய்யும் கொடு மைக்கு உடன் படுவேனா? அதற்கு உடன்படாது பசுவைக் கவர்ந்து சென்ற மையால் இளம்பூதியும், வேறு பலரும் எளியனை வெறுத்து ஒதுக்கி விட்டனர். அதனால், அடியேன் மதுரையம்பதியில் பிச்சையெடுத்து உண்ண நேர்ந்ததாயினும், பெருமித வாழ்வு வாழ்ந்தேன். ஒருநாள் நள்ளிருளில் சிலர் என்னை யடைந்து 'பெரும்பசி வருத்துகின்றது; இது பொழுது சிறிது உண்டி கொடுத்தால் எங்களுக்கு உயிர் கொடுத்தவர் ஆவீர்' என்று வேண்டி னர். பிறருடைய மனைதோறும் வாங்கிவந்த உணவு முழுவதையும் பலர்க் கும் வழங்கி, வெறுங் கலத்தை வைத்திருக்கும் ஏழையேன் அவர்கள் பசியை நீக்க வழியறியாது திகைப்புற்று வருந்துகையில், அன்னையே! அன்பு நிறைந்த அன்னையே!

'நாடு வறங்கூரினும் இவ்வோடு வறங்கூராது
ஏடா! அழியல்! எழுந்து இது கொள்க' என
அமுதசுரபி அங்கையில் தந்து என்
பவம் அறுவித்த வானோர் பாவாய்!

அடியேன் எத்துணைப் பிறவி யெடுக்க நேரினும், நின் திருவடித் துணை போற்றாத லல்லது மறந்து வாழேன். இந்திரன் என்மீது கடுஞ்சினங் கொண்டு, பற்பலவாறு என்னைத் துன்புறச் செய்தான் என்று தவறாக நினைந்து வருந்தினேன். அப் பெருமகன் அவ்வாறு செய்திலனேல், அமுத சுரபி யெனும் அத் தெய்வத் திருக்கலம் என்னினும் பன்மடங்கு நல்ல வளாய மணிமேகலையின் கைப் புகுவதற்கு இல்லாமலும், உலகு அனைத் திற்கும் பயன்படாமலும் அன்றே கழிந்திருக்கும்" என்று இவ்வாறு தனக் குத் தானே கூறிக் கொண்டிருக்கையில், மணிமேகலை அவனை யழைத்துக் கொண்டு "கோமுகி" என்னும் பொய்கைக் கரையை அடைந்தாள். "தவச் செல்வி, சென்ற பிறவியில் அடியேன் அமுதசுரபி யெனும் அரிய பாத்தி ரத்தை விடுத்த பொய்கை இதுதானே?" என்று கோமுகிப் பொய்கையைக் குறித்து வினவினன் அரசன். "ஆம், ஐய; இதுதான் அப் பொய்கை; நீ துயரால் மெலிந்து பாத்திரத்தை விடுத்த பொய்கை இதுவே" என்று கூறினள் மணிமேகலை. "என்றும் வற்றாத தெளிந்த நீரையுடைய பொய்கையே, வாழிபல் ஊழி!" என்று வாழ்த்தி வணங்கினன்.

தீவதிலகை யென்னும் அத் தீவின் தெய்வம் மணிமேகலையும், புண்ணிய ராசனும் வந்திருப்பதை யறிந்து அங்கு அடைந்தாள். அரசனும், மணிமேகலையும் அவள் அடியை வணங்கினர். "அரசே, இவ்வம்மைதான் மாண்பமைந்த பாத பீடிகையைக் காக்கும் தெய்வம்; தீவதிலகை யென்ற திருநாமம் உடையார்" என்று அப் பெண் தெய்வத்தைப் புண்ணிய ராசனுக்கு அறிமுகப் படுத்தினள் மணிமேகலை.

"அன்னையே, வானவர் கோமான் சென்ற பிறப்பில் என் பொருட்டுச் செய்த செயல்கள் என்னைத் துன்புறுத்துவதற்கு என்றே செய்தனவென்று கருதினேன். ஆனால், பெரியவர்கள் புரியும் எந்தச் செயலையும் இன்னதைக் கருதிதான் செய்கின்றனரென என் போன்ற சிறியவர்கள் முடிவு செய்வது தவறு என இப்பொழுது உணர்கின்றேன். அவராலன்றோ இன்று தங்களை யும், தரும பீடிகையையும் தரிசிக்கும் பேறு பெற்றேன்" என்று புண்ணிய ராசன் அவ் வணங்கை மீண்டும் தொழுதான்.

"அறத்தின் மைந்த, அன்பும் அறிவும் நிறைந்த ஆன்றோர்க்கு என்றும் சினமே வருவதில்லை; ஒருகால் வரினும் அச்சினம் ஒரு கணத்துள் மாறி விடும். சில சமயம் மாறாது பிறர்க்குத் துன்பம் செய்ய முயலினும், அம் முயற்சி அவர்க்குத் துயரந் தருவதுபோல் தோன்றி இறுதியில் இன்பந்தருவ தாகவே முடியும். எனது தலைவனை இந்திரன் செயலால் இதை நன்கு அறிந்து கொள்ளலாகின்றோம். அமுதசுரபியைக் கையிற் கொண்டு உயிர் களின் கொடுந்துயர் தீர்த்த பெரியோய், சாவக நாட்டின் பஞ்சத்தை நீக்க விரும்பி வணிகர் சிலர் சென்ற பிறப்பில் உன்னை மதுரையிலிருந்து நாவா யில் ஏற்றி அழைத்து வருகையில், கடுங்காற்றால் அக் கப்பல் அலைப்புண்டு மணிபல்லவம் எனும் இத் தீவை யடைந்தது. அப்பொழுது கப்பலில் இருந்து இறங்கிய நீ மீண்டும் ஏறியிருப்பாயென்று கருதி உன்னை இத் தீவில் தனியே விட்டுச் சென்றனர். நெடுந் தூரஞ் சென்ற பின்னர் நீ கப்பலில் இல்லாமலிருப்பதை யறிந்து, துணுக்குற்று நாவாயை மீண்டும் இத் தீவிற்கு விரைந்து செலுத்தி வந்தனர். அவ்வணிக மக்கள் இத்தீவு முழுதும்

உன்னைத் தேடி, இறுதியில் இங்கு—இதே இடத்திற்கு வந்து உனது வெற்றுடலைக் கண்டனர். அப்பொழுதே அவர்கள் துக்கத்தால் நெஞ்சடைப் புண்டு இறந்தனர். அங்ஙனம் இறந்த அவ்வொன்பதின்மரின் என்புக் கூடு கள் இதோ கிடக்கின்றன பார்! அவர்களுடன் வந்த வேறு சிலரும் அத் துயரக் காட்சியால் உயிர் துறந்தனர். அவர்களுடைய எலும்புக் குவியல் கள் இவை! இதோ புன்னை மரத்தின் கீழே கடல் அலையால் மணல் மூடப் பட்டு உனது பழைய உடல் கிடக்கின்றது!

நின் உயிர் கொன்றாய்,நின்னுயிர்க்கு இரங்கிப்
பின்னாள் வந்த பிறர்உயிர் கொன்றாய்.
கொலைவன் அல்லையோ கொற்றவன் ஆயினை!

எனினும் சென்றவை குறித்து வருந்ாதே; அனைத்தும் நன்மைக்கே என்ற அமுதவுரையை நம்பி, புத்த தேவனது உத்தம நெறியை உலகினர்க்கு விளங்கச் செய்துவா" என்று கூறி, மணிமேகலை யிடத்தும் சில அறவுரை பேசி, மின்னல் மறைவது போல் ஆகாயத்தில் எழுந்து மறைந்து சென்றான்.

புண்ணிய ராசன் தீவதிலகை குறிப்பிட்ட இடத்தில் மணலைச் சிறிது தோண்டினான். தசை யென்பது இல்லாமல், வெள்ளிய சுண்ணச் சாந்து பூசப்பட்டது போல் வெண்மை நிறம் வாய்ந்த, கட்டுக் குலையாத, தனது சென்ற பிறப்பின் எலும்புக் கூட்டைக் கண்டான். கண்டதும், அவனுக் குப் பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் மீண்டும் சிந்தையில் தோன்றி வருத்தத் தொடங்கின. அன்று தன்னை ஏற்றிவந்த மரக்கலம்தான் இத்தீவில் இறங்கி யிருப்பதை யறியாது தனியே விடுத்துச் சென்றதும், தான் இத்தீவில் எவ ரேனும் வசிப்பவர் உளரோ என்று இத்தீவு முழுவதும் அலைந்தும் ஒரு வரையும் காணாது, மனம் நொந்து தனது உயிரினும் அரிதாகப் போற்றி வந்த அமுதசுரபியைக் கோமுகிப் பொய்கையில் விடுத்ததும், உயிர் துறந்த தும் ஒவ்வொன்றாக நினைந்து நினைந்து தனது பழைய யாக்கையைப் பார்த்த வண்ணமே மனம் மயங்கிக் கண்ணீர் உகுத்தான். அவன் நிலையை அறிந்த மணிமேகலை, "அரசர் பெருந்தகையே, உனக்கு நேர்ந்தது யாது? எது கருதி இவ்வாறு கலங்குகின்றாய்? உனது பழைய சம்பவத்தை மீண்டும் உனக்கு நினைவூட்டி, நீ துயரம் உறுவதைப் பார்க்கவா யான் உன்னை இத் தீவிற்கு அழைத்து வந்தேன்? நன்றாயிருக்கது உன் செயல்! ஆன்றோர் களிடத்து அறவுரை கேட்டு உணர்ந்த நீ இங்ஙனம் மயங்குவது எனக்குத் துயரினும் வியப்பே மிகுகின்றது. புண்ணியச் செல்வ,

'அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க, மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை'

[இறக்கும் காலத்தில் செய்வோம் என்று எண்ணாமல் அறத்தை எப்போ தும் செய்க; அஃது நாம் இறக்கும் போதும் அழியாத துணையாகும்] என்ற உண்மையை உலகினர்க்கு உணர்த்த விரும்பியே உன்னை இங்கு அழைத்துப் பழம் பிறப்பு அறியுமாறு செய்தேன். உனது முற்பிறப்பின் நிகழ்ச்சியை உனது நகரிலேயே நான் உன்னிடம் கூறி யிருப்பேன். அங்ஙனம் கூறி யிருந்தால் உனது புகழை உலக முழுவதும் அறிந்து மகிழ ஏதுவாகாது. நீ இங்கு வந்து தரும பீடிகையைத் தரிசிக்கவும், பழம் பிறப்பு உணரவும்

நேர்ந்ததால் உனது புகழ் உலகெங்கும் எளிதில் பரவும். நீ வருந்த வேண்டாம்'' என்று கூறி புண்ணிய ராசனைத் தேற்றினன்.

"அருந் தவப்பேறே, தரும பீடிகையைத் தரிசித்த பொழுது சென்ற பிறப்பின நிகழ்ச்சிகள் அனைத்தும் எனது மனக் கண்ணில் புலனாயின. எனினும், அது பொழுது ஒரு சிறிதும் துயருண்டாகவில்லை; எனது இப் பழைய யாக்கையைப் பார்க்கும்பொழுது மனமுடைந்து கண்ணீர் மல்கத் தொடங்கி விட்டது. இன்னென்று என் மனதை வருத்திக் கொண்டே இருக்கிறது. என்னையீன்ற அன்னை—சாலி யென்னும் பெயருடையாளின் வாழ்க்கை எவ்வாறு முடிந்ததோ என்று எளியேன் மனம் ஏங்குகிறது. அவள் கன்னியாகுமரியில் நீராடித் தனது ஊர் சென்று அடைத்ததும், அவளை அவன் கணவன் ஏற்றுக் கொண்டதும் கொள்ளாததும் ஒன்றும் புலனாகவில்லை.''

"முன்பு எல்லாம் உன்னைக் கண்டதும் எனக்கு மகிழ்ச்சியே உதித்தது; இப்பொழுது உனது இப் பேதமையைக் கண்டு என் மனம் பெரிதும் வருந்துகிறது. அரசே, பிறருடைய தாழ்நிலையைக் கண்டு இரங்குதல் உத்தமமே யெனினும், உனது தாய் சாலியைக் குறித்து நீ வருந்துதல் பேதமையாகும். அன்று உன்னை பார்ப்பனர் பலர் வளைத்துக் கொண்டு 'கற்பில்லாதவள் பெற்ற மகன்' என்று பழித்தபொழுது நீ அவர்களுக்குக் கூறிய அமைதி மொழிகளை மறந்தனையா? நீ பிறந்து உலகில் என்றும் அவளை அழியாதவளாகச் செய்து விட்ட பிறகு நீ அவள் நிலைமையைக் குறித்து வருந்துதல் பேதமையாகும்''

"உத்தமச் செல்வி, என் அறியாமையை மன்னித்துவிடு; அடிக்கடி இத்தரும பீடிகையைத் தரிசிக்கவும், உன்னுடன் இருந்து மெய்யுரை கேட்கவும் எனது உள்ளம் விழைகின்றது. மீண்டும் எனது நாடு சென்று அரசு புரிதலை யேற்க என் உள்ளம் அஞ்சுகிறது. இவ் வேண்டுகோளை மறுக்காது ஏற்றருள வேண்டுகிறேன்.''

"மெய்யுணர் வுடையோய், உனது விருப்பம் இருந்தவாறு நன்று! நன்று! நாடுபுரக்கும் அரசர்கள் துறவு மேற்கொண்டால் பின்பு உலகம் என்னும் என்பதை ஒரு சிறிதும் நீ சிந்தித்துப் பார்க்க வில்லையே; உலகில் நல்லவரும் உளர்; தீயவரும் இருக்கின்றனர். வலியோர் மெலியோரும் உண்டு. அறிவுடையோரும் அஃதில்லாதவரும் இருக்கின்றனர். இங்ஙனம் பல திறப்பட்ட மக்களுள் ஒருவரால் ஒருவருக்குத் துன்பம் நிகழாதவாறு பாது காத்தல் உன்னைப் போன்ற மன்னவரின் கடமை யல்லவா? இதனினும் சிறந்த தொண்டு வேறு ஒன்றுமேயில்லை. புத்த பகவான் அரசு நீங்கித் துறவு மேற்கொண்ட செய்தி வேறு. அக்காலத்தில் உலகெங்கும் அறியாமை இருள் சூழ்ந்திருந்தது. ஓரிடத்தில நிலைத்திருந்து அப்பேதமையை ஒழிக்க வியலாதென்று கருதி அவர் துறவியானர். இப்பொழுது நிலைமை அவ்வாறு இல்லை. நீ உனது நாட்டைப் பாதுகாத்து வந்தால் உன் நாட்டின் அமைதி நிறைந்த வாழ்க்கையை—ஆனந்தம் குடிகொண்டுலவும் அழகை மற்றைய நாட்டு அரசர்களும் கண்டு உன் வழியைப் பின்பற்றுவர். நீ உனது நாட்டிற்குச் செல்லா விட்டால் தாயைப் பிரிந்த குழந்தைகள் வாய்

விட்டுக் கதறுவது போல் உன்னாடு உன்னை நினைத்துப் புலம்பும். ஆதலின், நீ உனது நாடு சென்று அனைவர்க்கும் உண்டியும், உடையும், உறையுளும் கொடுத்துப் பாதுகாத்துவா. இதுவே மிகச் சிறந்த அறமாகும். நான் வஞ்சிமா நகர் செல்ல வேண்டியுளது. போதி மரத்தின் கீழ் அமர்ந்து புண்ணிய நெறியைப் போதித்த ஆதிநாதன் அடியிணையை அன்ப, என்றும் மறவாதே; அன்பு வாழ்க! அறம் வாழ்க" என்று கூறி, மணமும் அழகும் நிறைந்த மலர்க்கொடி ஒன்று ஆகாயத்தில் எழுந்து பறந்து செல்வது போல் மணிமேகலை பறந்து சென்றாள். புண்ணிய ராசன் மணிமேகலை தனது கண்ணிற்குத் தெரியும் வரை இரு கரங்களையும் கூப்பிய வண்ணம் நின்று; அவள் வடிவம் மறைந்ததும் பிரிவு எனும் துயர் அவன் மனதை வருத்தியது. எனினும் நாட்டின் நினைவு எழ, அத்துயரை ஒருவாறு மறந்து, மரக்கலம் ஏறித் தனது நாடு அடைந்தான்.

புண்ணிய ராசன் மணிபல்லவம் சென்று சுகமே திரும்பியதைக் குறித்து அவன் நாட்டு மக்கள் அடைந்த மகிழ்ச்சிப் பெருக்கை அளவிட்டுரைக்க முடியாது. இராமபிரான் பதினன்கு வருடம் வரை பிரிந்திருந்து மீண்டபொழுது கோசல நாட்டார் அடைந்த குதூகலத்திலும் அதிகமாக இருந்தது அவர்களுடைய குதூகலம். மாட மாளிகைகளையும், கூட கோபுரங்களையும் மாசு துடைத்து, வெள்ளிய சுண்ணச் சாந்து பூசினார்கள். அவற்றின் மேல் அழகிய கொடிகள் பல பறக்க விட்டார்கள். பலவகை நிறச் சாந்துகளால் பழைய சித்திரங்களைப் புதுப்பித்தார்கள். பொற் பதுமைகளையும், பாவை விளக்குகளையும் அங்கங்கே வைத்து அழகு படுத்தினர். முத்து பவளங்களை மாலை மாலையாகக் கோத்து அவற்றைத் திண்ணைகளிலும் தூண்களிலும் தொங்க விட்டனர். வாழை கமுகு முதலிய மரங்களை வரிசை வரிசையாக நட்டனர். அகன்று பரந்த தெருக்களிலும் சந்துகளிலும் புது மணலைப் பரப்பினார்கள். மாவிலை முதலியவற்றால் மகர தோரணங்கள் தூக்கினர். ஆன்றோர்கள் மன்றங்களிலும் பிற விடங்களிலும் அமர்ந்து, அறத்தின் பெருமையை விளங்கக் கூறினர். இங்ஙனம் நாடு முழுவதும் அன்பும் அறமும் தழைத்தோங்க புண்ணிய ராசன் பல்லாண்டு வாழ்ந்திருந்தான். அறம் வாழ்க.



# "மணிமேகலை" ஆராய்ச்சி

R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


## 5. மதக் கொள்கைகள்.

(442-வது பக்கத் தொடர்ச்சி.)

### ஆசிரியரின் மதப்பற்று.

'மணிமேகலையில்' பல விடங்களிலும் புத்தமதக் கொள்கைகள் கூறப்பட் டிருப்பதோடன்றிச் 'சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை' (27). 'தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதை (29), 'பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை' (30) என்னும் மூன்று காதைகளிலும் மதவிஷயமானவைகளே கையாளப்பட்டுமுள்ளன. அக்காலத்தில் பரவி யிருந்த பிறமதக் கொள்கைகளைச் சுருக்கமாகவும், புத்தமதக் கோட்பாடுகளை பரக்கவும் இவற்றுள் கூறப்பட்டுள்ளன. பௌத்த மதத்தை நன்கு அறிந்தவராகலின் சாத்தனார், அதன் பெருமையைத் தமிழ்மக்கள் உள்ளபடி அறிந்துகொள்ளும்படி, தெளிவாகவும், வெகு விரிவாகவும் எழுதி யுள்ளனர். இவற்றினை நோக்குமிடத்துச் சாத்தனார் புததமதத்துக் கொண்டிருந்த பற்று நன்கு விளங்குவது நோக்கற்பாலது. அத்வைதக் கொள்கையினரன்றிப் பிற எம்மதத்தவரும், தம்மதமே தமக்குச் சம்மதமெனக்கொண்டு பிறமதங்களைத் தம்மதம்போலக் கருதாது அவற்றினை உயர்த்தியும் தாழ்த்தியும் கூறுதல் சாமானியமாக நிகழக்கூடியது. அங்ஙன மாேனாரில் சாத்தனாரும் ஒருவராக இருக்கலாம்! இவ்வாசிரியர் காலத்தில் பௌத்தமதம் இத் தென்னாட்டில் பரவி யிருந்ததைச் சிலப்பதிகாரம் முதலிய பிறதமிழ் நூற்களிலிருந்தும் உணரலாம். இந்நூலில் கூறப்பட்டுள்ள மதசம்பந்தமான விஷயங்களிலிருந்து மணிமேகலை எழுதப்பட்ட காலமும் அதனால் மற்றுமுள்ள பிற சங்க நூற்களின் காலமும் ஒருவாறாக அறிதற் கேதுவாக உள்ளன.

### சமய நூலாராய்ச்சி.

மேற்காட்டிய மூன்று கதைகளிலும், மணிமேகலை, புத்தமதக்கொள்கைகளில் பற்றுக்கொண்டவளென்பது தெரிய வருகின்றது. அவள் பௌத்த சமயவாதிக ளிடத்தும், மற்றும் தத்தமது மதத்தகத்தே மதவைராக்கியம் கொண்ட மதாபிமானிகளான அளவைவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசிகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி முதலிய பல சமயவாதிகளிடத்தும் உசையாடி, அவரவர்களின் மதவுசங்களையும், மதச் சார்பான பிறவிஷயங்களையும், அவற்றைக் குறித்துக்கூறும் மேம்பாடுற்ற மதநூற்களின் குறை குணங்களையும் உணர்ந்து கொண்டதாகவும் கூறப்பட்டுள்ளது. முற்காலத்தில் வழங்கி வந்த பல சமய நூற்களிலும், தருக்க முறைகளிலும் சாத்தனார் மிகுந்த ஆராய்ச்சியுடையா

ரென்பது 'மணிமேகலையில்' அவர் தத்துவ விஷயங்களைக் கையாண்டுள்ள முறையால் தெளிவாகின்றன; இங்கு சாத்தனார் தாம் கொண்டுள்ள கருத்துப்படி, துறவியின் பெருமைகளை விரித்துக் கூறியுள்ளதோடன்றி, அக்காலத்திலிருந்த மதங்களின் கொள்கைகளையும் தாமுணர்ந்தவாறு இன்னவையென்று காட்டாநிற்கின்றனர். அவை யாவும் சுருக்கமாகக் கீழே கூறப்பட்டுள்ளன.

## நூற்கள் அறமுணர்த்தல்.

'மணிமேகலை' பெரும்பாலும் புத்தமதத்தைப்பற்றியே கூறுவதாகலின் கதைத்தொடர்பும், அதிகமாகப் படிப்பவருக்கு இன்பம் தருவதாகக் காணப்படவில்லை. காமவெறி கொண்ட உதயகுமரன், காஞ்சனன் வாளுக்கு இரையாகி உயிர்துறந்த பின்னர் மத விஷயங்களையேயன்றி, சாமானியமாகப் படிப்பவர்களுக்கு இன்பம் பெறுவிக்கும்படியான கதை விஷயம் அதிகமாகக் காணவில்லை. இக்காரணத்தால் நூலிடத்துக் குறைகூறுதல் அடுக்குமோ என ஆராயுமிடத்து, ஆன்றோர்கள் கூறுகின்றதும் சான்றுகளைக் காண்புழி, அவை சற்றும் தவறாகாதெனத் தேர்ந்து தெளியவே வேண்டியுள்ளது. நன்னூலிடத்துப் பொருந்தவேண்டிய அம்சங்களைக் கூறுமிடத்துக் கற்றறிந்த பெரியோர்கள், "இம்மை நலங்களையே பெரிதாகக்கொண்டு அவற்றில் ஈடுபட்டு அழிகின்ற மன்னுயிர்களை உய்விக்குமாறு, உலக நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை முதலியவற்றைக் காட்டி, உலக மாயையினால் மறைவுண்டிருக்கும் ஆன்ம விசேஷங்களை விளக்கி, உலகில் எளியாரை வலியார் நலியாமல் எல்லோரும் அறத்தாற்றிற் பொருளீட்டி இன்ப நுகர்ந்து வீடடையுமாறு ஹிதோபதேசஞ் செய்வதே உத்தமக் கவிகளின் உள்நோக்கம்" என்பர்.

"நீப்பரும் உறக்கத்துக் கனவேபோன்றும்
நனவு பெயர்பெற்ற மாயவாழ்க்கையை மதித்துக்
காயத்தைக் கல்லினும் வலிதாகக் கருதி."

விதிவினை நினையாது, சதமற்ற உலகப்பற்றுகளில் நொந்து கிடக்கும் சிற்றின்ப பிரியரானோருக்குப் பேரின்பப் பெருநகரஞ்சேர்தலை எய்துதற்கு இந்நூல் வழிகாட்டியாக உள்ளதென்பதில் ஐயமில்லை. இந்நூலோ நற்கருத்துக்களை நிறையக் கொண்டுள்ளது. சங்ககால நூற்கள் பெரும்பாலும், அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்களைப் பற்றியே கூறுவன என்பது எவரும் அறிந்ததே. அவை பிறவிப் பெருங் கடலுட் புகுத்தும் மும்மலங்களைப் போக்கி முத்தியங்கரையிற் சேர்க்கும் பேருரிமை பெற்றன. 'மணிமேகலை'யும் அங்ஙனமாயதோர் நூலேயாகும்.

## தத்துவக் கிளர்ச்சி.

சரித்திர நூற்கள், கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட ஐந்நூறு வருஷங்களில், வட இந்தியநாட்டில் ஒரு பெரும் தத்துவக் கிளர்ச்சி யேற்பட்டதைக் கூறும். சண்டை சச்சரவின்றிச் சமாதானமே எங்கும் நிறைந்திருந்த அக்காலத்தில், ஆராய்ந்தறியும் ஆற்றலும், நூற்கேள்விகளின் பயிற்சியும் மிகவுடைந்த கற்றறிந்தோர் பலர், இயற்கைத் தோற்றம், ஆத்துமாவின் உண்மைநிலை, பிரபஞ்ச வாழ்க்கையின் அநித்தியமாகிய இத்

திறத்திய விடயங்களை ஆராய்வதில் தமது மனதைச் செலுத்துவாராயினர். அஹிம்சா தருமத்திற்கு விரோதமாக உயிர்கள் அதிகமாகக் கொல்லப்பட்டு வந்தன. அதனைக் கண்டித்துப் பலர் கூறினர். வேதங்களைப் போற்றினராயினும் அவை கூறும் முறைகளைப் பலர் வழிபடாராயினர். இந்துமதப் பற்றுடையோரும் தமது மதவழிபாடுகளில் பற்பல சடங்குகளை விடுத்துச் சிலவற்றையே கைக்கொள்ளுவா ராயினர். பலர் தமது புதிய கொள்கைகளை நாடெங்கும் சென்று போதித்துப் பரவச் செய்து வந்தனர். இப் புதிய இயக்கம், பல நாடுகளிலும் சிறந்து அக்காலத்தில் தலைதூக்கி முன்னுக்கு வந்த மகதநாட்டில் வேரூன்றுவ தாயிற்று. இங்ஙனமாக எழுந்த புதிய மதங்களுள் புத்தமதமும், ஜைனமதமும், இரண்டாகும. இவ்விரு மதங்களும் இந்து மதத்திலிருந்தே வெளிவந்தவைக ளென்பர். புத்தமதம் இந்தியாவிலன்றி, சைனு, ஜப்பான், தென்அமெரிக்கா, இலங்கை முதலிய பல வெளிநாடுகளிலும் பரவி யிருந்தது. கரும சம்பந்தத்தால் உளவாகும் பிறப்பையும், இறப்பையும் போக்குதற்காகிய மார்க்கங்களைத் தேடுவதே இவ்விரு மதங்களின் நோக்கமாக இருந்தது இம் மதங்கள் வெகு தீவிரமாகத் தோன்றி, இந்நாடெங்கும் பரவின வெளியிடங்களிலும் பரவின. ஆயின் சிற்சில இடங்களிலேயே அவை நிலைப்பதாயின. பரவிய எங்கும் இராது மின்னலைப்போன்று, பிறந்த இந்நாட்டிலேயே சடிதியில் தலைசாய்வதாயின. இவ் வரலாறுகள் யாவும் சரித்திர நூற்களில் படித்தறிக. மகாயானம், ஹீனயானம் என்ற இரு பகுப்புட்பட்ட பௌத்தரின் கொள்கைகளில், மணிமேகலை, ஹீனயானரின் முறைகளைப் பின்பற்றுகின்றது.

புத்தரைப்பற்றிய பல செய்திகளும் பௌத்தமதத்தினரின் கொள்கைகளும், புத்தருடைய பிறப்பைக் கூறும் 'புத்தஜாதகக் கதை'களாலும், பௌத்தமத வெழுச்சியையும், அது எங்ஙனும் பரவிய செய்திகளையும் கூறும் இலங்கைத் தீவிலுள்ள 'தீபவம்சம்' 'மகாவம்சம்' என்னும் நூற்களாலும்; வினயதர்ம பீடகம், சுத்ததர்ம பீடகம், ஆதிதர்ம பீடகம் என்னும் 'திரிபீடக மென்னும் நூலாலும், 'லலித விஸ்தார'மென்ற நூலாலும், திபேத்து தேசத்தில் ஒன்பதாவது, பன்னிரண்டாவது நூற்றாண்டுகளில் எழுதப்பட்டதெனக் கூறப்படும், 'புத்த சரித' மென்னும் நூலாலும்; ஆங்கிலத்திலும் எட்வர்டு ஆர்னல்டு என்பவர் எழுதியுள்ள 'லைட் ஆப் ஆசியா' என்னும் நூலாலும் விளங்கும். சுவாமி ராமகிருஷ்ணர் இம்மதத்தினரின் கொள்கைகளை ஒட்டியும் வெட்டியும் தமது அரிய பிரசங்கங்களில் கூறுவனவும் நோக்கற்பாலன.

### அளவை வாதி.

மணிமேகலை, மந்திரபலத்தினுல் முனியுருக்கொண்டு, பல சமயவாதிகளின் கருத்தையு முணர்ந்திட, சோர் தலைநகராகிய வஞ்சியம்-திலையடைந்தனள். வாதி யென்போன், காரணங்கள் கூறி, மேற்கோள்களை எடுத்துக்காட்டிப் பிற கொள்கைகளைக் கண்டித்துத் தனது கொள்கைகளை நிலைநாட்டுபவன். அளவைவாதியின் வாயிலாகச் சாத்தனுர் வைதிக வாதத்தின் இலக்கணையைக் கூறி யுள்ளனர். அவர்கள் காட்சி முதலிய பிரமாணங்களைக்கொண்டு, காரணம் பகர்ந்து தமது மதக்கருத்துக்களைப் புகன்றிடுமியல்பினர். முதற்கண், மணிமேகலை அளவைவாதியை யடைந்து "நின்

கடைப்பிடி யியம்பு" எனக் கேட்டலும், அவனும் அறிவைப் பெறுதற்கும், நற் கருத்தை யளித்தற்கும் தேர்ந்த கருவிகளாக உள்ள பிரமாணங்களைப்பற்றி விரிவாக விளக்குவானாயினன். அதன் சுருக்கம் வருமாறு. விரிவை மூத னூலில் கண்டுகொள்க.

வேதவியாசர், கிருதகோடி, சைமினி யென்னும் இவ்வாசிரியர்கள், பிர மாணங்களி னியல்பைத் தமது கருத்துப்படி வெவ்வேறாகக் கொண்டுள்ள னர். வியாசர் அளவைகள் பத்தென்பர். கிருதகோடி இரண்டைவிட்டு எட்டு அளவைகளைக் கூறுவர். சைமினி நான்கினை நீக்கி அளவைகள் ஆறை மொழிந்திடுவர்.

வியாசர் கூறும் பத்துப் பிரமாணங்கள், காண்டல், கருதல், உவமம், ஆகமம், அருத்தாபத்தி, இயல்பு, ஐதிகம், அபாவம், மீட்சி, உள்ள நெறி யென்பன. இவற்றுள் காட்சி இலக்கணம் ஐந்து வகையாகக் கூறப்பட்டுள் ளன. இதனை நூலில் காண்க. (27-13-20) கருத்தளவாவது அனுமானத் தால் பொருள்களின் மெய்த்தகைமை உணர்ந்திடும் தன்மையாகும். அனு மானப் பிரமாணமாவது, உள்ளதை வைத்துக்கொண்டு இல்லாத தொன்றின் உண்மையைக் காரணத்தோடு அறிந்திடுதலாகும். அது பொது, எச்சம், முதலென்ற மூவகைப்பட்டது. பொதுவை சாமானிய அனுமானமென்றும் எச்சத்தைக் காரியானுமானமென்றும், முதலைக் காரணானுமானமென்றும் கூறுவர். பொதுவெனப்படுவது சாதனம் சாத்தியமாகிய இவை தம்மொடு அறுவடமின்று யிருந்தும், மதங்கொண்டு விளங்குகின்ற யானையின் காலொலி யைக் கேட்டோன், உடனே அங்கு யானை உண்டென உணர்த்தலுமாகும். எச்சமென்பது நீர்வெள்ள முள்ளதால், அவ்வேதுவினால் அவ்விடத்து மழை நிகழ்வு உண்டென்பதை நிச்சயித்து உரைத்தலாம். முதலென மொழிவது கரியமேகத்தைக் கண்டவிடத்து, இது மழை பெய்திடுமென இயம்புமாறு, கண்டதொரு பொருளைக்கொண்டு காணுதனவற்றை உணர்ந்திடுதலாம்.

## அளவைகளின் இலக்கணம்.

உவமமாவது ஒப்புமையளவை. ஒப்புமை முகத்தான் பொருளின் உண்மையை ஊகித்தல். ஆகமவளவையாவது கற்றறிந்த சான்றோர்களின் நன்னூற்களால் போக புவனமாகிய சுவர்க்கமும் நரகமும் உண்டெனப் புலங் கொளலாம். அருத்தாபத்தியாவது கூறிய ஒன்றைக்கொண்டு கூறாத அதற்கு மாறாக உள்ள பொருளை அறிந்திடுவது. அது கொடுப்பவ ருண்டென்ற விடத்து கொடாதாரு முண்டென்று கொள்ளுமாறு போல்வன. இயல் பளவையாவது "யானைமே லிருந்தோன் றோட்டிக்கய லொன்றீயாது, அதுவே கொடுத்தலை"ப் போன்றது. ஐதிக மெனப்படுவது வெகுகாலமாக வழங்கி வருவதொரு செய்தியாகும். 'இம்மரத்தில் பேயொன்று எய்தி யுள் ளது' எனக் கூறப்படுதலால் அம்மரத்தி னியல்புணர்ந்து தெளிதலைப் போலாம். அபாவமென்பது இல்லாததொரு பொருளை இல்லை யென்ப தாம். மீட்சி யென்பது இராமன் வென்றானென இராவணன் தோற்றமை தானாக விளங்குதல் போல்வது. உள்ள நெறியென்பது இயற்கையாக உள்ள தொரு பொருளை உள்ளவாறு கூறுவது. அதனை, "வியக்குற்ற கால் சலிக் குந் தீச்சுடும் வியனீர் குளிரும், வயக்குற்ற மண்வலிதென்று பட்டாங்கு வழங்குவதே" என்பர்.

## அவைகளின் போலி வகைகள்.

மேற்கூறிய பிரமாணங்களின் பாசங்கள் எட்டு வகைப்படும். அவை சுட்டுணர்வு, திரியக்கோடல், ஐயம், தேராது தெளிதல், கண்டு உணராமை, இல்வழக்கு உணராததை யுணர்தல், நினைப்பு என்பனவாம். சுட்டுணர் வாவது குறிப்பாக உணருவது. ஒன்றை மற்றொன்றாகக் கொள்ளுதல் திரியக்கோடலாம். ஒரு பொருளையும் நிச்சயமாகக் கொள்ளாது சந்தேகித்தல் ஐயம். "செண்டுவெளியில், லோராது தறியை மகனென வுணர்தல்" தேராது தெளித லென்றனர். ஒரு பொருளின் உண்மை நிலையைக்கண்டும் தெரிந்திடாதிருத்தல் கண்டுணராமை. இல் வழக்கென்பது முயற்கோடொப்பின சொல்லின், சொல்லிய வப்பொருளை சொல் லளவாகக் கொண்டிருந்து கருத்திற் றறியாமை. 'பிணிக்குத் தீப்புணர்ந் திடன் மருந்து" என்று கூறிய விடத்துப் புலங்கொள நினைத்தலைப் போல்வன, உணரா தொருபொருளைச் சிந்தித்து உணருதலாம். நினைப் பெனப்படுவது காரணமின்றி, 'நினக்கிவர் தாயுந் தந்தையுமென்று' பிறர் சொல்லிய சொல்லைக் கருதலைப் போல்வதாம்.

## மறைந்தன நீங்க எஞ்சிய கோள்கைகள்.

இத் தன்மையனவாகிய அளவைகள் இவ்வுலகில் லோகாயதம், பௌத்தம், சாங்கியம், நையாயிகம், வைசேடிகம், மீமாம்சமென்ற பெயரொடும் விளங்கும். அவற்றின் ஆசிரியர்கள் முறையே பிருகற்பதி, சினன், கபிலன், அக்கபாதன், கணாதன், சயிமினி முதலியோராவர். இவர்களின் கொள்கை களைத் தழுவி அப்போதியின்றுள்ள அளவைகள், முறையே பிரத்தியக்ஷம், அநுமானம், சப்தம், உவமானம், அருத்தாபத்தி, அபாவம் என்பன. ஒரோ ரிடத்திலுள்ள சிறுவேற்றுமைகளை யன்றிப் பதஞ்சலியின் யோகசூத்திரங் கள், சாங்கியர் கூறும் முறைப்படியே இருப்பது நோக்கற்பாலது. கபிலர் தனித்துக் கடவுளில்லையென்றும், பற்றைக்களைந்து அதனால் பிறப்பும் இறப்பு மற்றிருக்கும் பந்தமற்ற ஆததுமாவே கடவுளென்றும் கூறுவா. இவற்றை விரிவாக முதனூலில் காண்க.

## மும்மூர்த்திகளின் மதவாதிகள்.

பின்னர், மணிமேகலை, மும்மூர்த்திகளின் மதவாதிகளை யணுகி முத லாக "இறைவா! ஈசா!" எனக் கூறிநின்ற சைவவாதி முன்வர, "நின்றெய்வத் தின் தன்மை யாது?" என, அவனும், "எம்மிறைவன், இருசுடரோடிய மானன்; கலையுருவினன். படைத்து விளையாடும் பண்பினன். தொடைத் துயர்தீர் தோற்றத்தோன், தன்னில் வேறு தானொன் றில்லோன். இத் தகைமைத்தாயவன்" என்று உரைத் திட்டான். பின்வந்த பிரமம வாதி, "பேருலகெல்லாம் தேவனிட்ட முட்டை" யென்றனன். காதல் கொண்டு கடல்வண்ணன் புராண மோதின வைணவவாதி, 'பேருலகெல் லாம் ஆரணன் காப்பெ"ன்றான்.

## வேதவாதி.

பின்னர் வேதவாதி ஆதியும் அந்தமுமில்லாது நிற்கும் வேதத்திற்குக் கற் பம் கையும், சந்தம் காலும், எண் கண்ணும், நிருத்தம் செவியும், சிக்ஷை மூக் கும், வியாகரணம் முகமுமாகப் பொருந்த அமைக்கப்பெற்றுள்ள தென்பா

ளுயினன். உரையாசிரியர் நச்சினார்க்கினியர் வேதத்தின் ஆறு அங்கங்கள் யாதென்பதைக் கூறுவது காண்க. (தொல், புறத். 20) கலித்தொகையில் கடவுள் வாழ்த்துச் செய்யுளுரையிலும் இதனை நோக்குக.

## ஆசீவக மதம்.

"நின் இறை நூற்பொருள் யாது" என மணிமேகலை ஆசீவக நூலறிந்த புராணனை வினவ அவனும், "எல்லையில்லாத பொருள்களெங்கும் எப்பொழுதும், புலலிக்கிடந்து புலப்படுகின்ற வரம்பில்லாத அறிவன் எம்மிறைவன். எமது நூல் உயிரும் நான்கு வகை யணுக்களுமாகிய ஐந்து நற்பொருள்களையும் கூறும். அந்நான்கும் நிலம், நீர், தீ, காற்று என்பனவாம். அவை உயிருடன் பொய் வகையாகக் கூடிப் பிரிவதுஞ் செய்யும். திரள்வதுஞ் செய்யும். வெவ்வேறாகி விரிவதுஞ் செய்யும். அவ்வகையாக அறிவது உயிரெனப்படும். ஆதியில்லாத பரமாணுக்களாகிய நிலம், நீர், காற்று இவை ஒன்றோடொன்று சேரும் தன்மையன. ஆயினவை தீதுற்று யாதும் சிதைவது செய்யா. புதிதாய்ப் பிறந்தொன்றொன்றிற் புகுதா. முதுநீரணு நிலவணுவாய்த் திரியா. ஒன்றிரண்டாகிப் பிளந்துஞ் செய்யா. பூதங்களெனப்படும் இவ்வணுக்கள் கூடும். பிரியும் அவை

> "மெய்க்குணத் தடைந்தா லல்லதுஉ நிலனாய்ச்
> சிக்கென் பதுவு நீரா யிழைவதுந்
> தீயாய்ச் சுடுவதுங் காற்றாய் வீசுவது
> மாய தொழிலை யடைந்திட மாட்டா."      (27-141-3)

தெய்வத் தன்மையனவான இவையாவு முணர்ந்து, இப் பூதங்களின் திரட்சியுள்ளானோர், கருமப் பிறப்பும், கருநிலப்பிறப்பும், சேமபிறப்பும், வெண்ணபிறப்பு மென்ற பலபிறப்பு மெடுப்பர். கழிந்த பிறவியி னறிவே ஒவ்வொரு பிறவியிலும கலந்து வந்திடும். இப்பிறவிகளி னிறுதியிலே வீடடைந்திடுவர். பெறுதலும், இழத்தலும், இடையூறுறுதலும், பெரிதலைவ நீங்கலும், பிறத்தலும், சாதலும், கருவிற்பட்ட பொழுதே கலக்கும். இன்பமும் துன்பமும் மக்களைப் பாதிக்கும். இவை யாவும் முன்னுள ஊழின்படி யாகும். அவ் ஊழே பின்னு முறுவிப்பது. இவையாவும் மற்கலி நூலின் வகையாம்" என்பானுயினன். இவ்வாசிக மதத்தினர் சமண சமயத்தின் இரு வகுப்பினரிலொருவரென்றும், இவருக்குத் தெய்வம் மற்கலி யென்றும்; இவரது மத நூல் நவகதி ரென்பதும்; இம்மதம் முற்காலத்தில் சமதண்ட மென்று பெயருள்ள ஓரூரில் பரவியிருந்ததென்றும் கூறுவர். இம்மதக் கொள்கைகளை ஆசிரியர் விரித்துக் கூறியவாறு நூலில் கண்டுகொள்க. (27: 105-164.)

## நிகண்ட வாதம்.

பின்னர் நிகண்டவாதியை மணிமேகலை யடைந்து "நீயுரை. நின்னாற் புகழ்ந்த தலைவன் யார்? உனது நூற்பொருள் யாவை? அப் பொருணிகழ்வும கட்டும வீடும் மெய்ப்பட விளம்பு" என, அவன் "இந்திரர் தொழப்படும் இறைவனெம் மிறைவன். அவன் தந்த நூற்பிடகம், ஆத்திகாயமும், அதன் மாத்திகாயமு மாகும். காலாளதகாசமும், தீதில் சீவனும் பரமாணுக்களும் நல்வினையும தீவினையும், அவ்வினையாற் பந்தமும் வீடுமாகிய இத் திறத்திய

வாகிய பொருளின் தன்மையதாயும் பத்துப் பகுதியினதாகத் தோன்றும்," என்று கூறிப்பின்னர் தோன்றலின் பலவேறு வகைகள் முதலியன மொழிந்திட்டு, இறுதியாக வினைப்பயனால் வீடெய்தும் வழியினையும் கூறவா னுயினன். இந் நிகண்டவாதிகள் சமணர் இரு திறத்தாரில் ஒருவகையினரென்றும், அவர்களது தெய்வம் அருகனென்றும் நிகண்ட வாதத்தை நிர்க்கந்த வாதமென்றும் திகம்பர வாதமென்றும் கூறுவர்.

## சாத்தனாரும் சமணரும்.

ஜைனமதத்திடத்துத் தனக்குள்ள வெறுப்பாலோ, தனக்குப் பற்றில்லாததாலோ, அவர்களின் கொள்கைகளும் வழக்கங்களும் தன் மனத்திற்கு ஒவ்வாததாலோ அன்றித் தனக்குள்ள அளவு கடந்த பௌத்தமதப் பற்றால் பிறமதங்களைக் கீழாகக் கூறும் நோக்கத்தாலோ யாதுபற்றியோ சாத்தனார், சமண மதத்தையும் அம்மதத்தினரையும் தாழ்த்திப் பல விடங்களிலும் தனது நூலில் கூறியுள்ளனர். (3: 86-91) அவர்கள் பௌத்தர்களைப்போல இரப்பவர்களுக்கு இரக்கங்கொண்டு இல்லையென்னுது இருப்பதை இட்டு இன்புறச் செய்திடும் உதார குணத்தைக் கொள்ளாது, பசு முட்டக்கிழிந்த வயிற்றில் சரிந்திட்ட குடலொடு வந்து, சரணமெனத் தம்மை அடைந்த சுதவதியின் தந்தையைப் புறக்கணித்து ஓட்டியவாறுபோல, துன்புற்றோருக்குத துணை புரியாத துர்க்குணத்தவர்களென்று மொழிந்துள்ளார் (5: 61-70.)

## சாங்கிய வாதம்.

முக்குணத்தின் செயலால் இயற்கைத்தோற்றம் உளவாயிற்றென்று தொடங்கி சாங்கியவாதி, "புத்தி வெளிப்பட, அதன் கண் வாயு வெளிப்பட, அதன்கண் அங்கி வெளிப்பட, அதன் கண் அப்பின் தன்மை வெளிப்பட்டு, அதில் மண் வெளிப்பட்டு அவற்றின் கூட்டத்தின் மனம் வெளிப்படு"மென்று கூறிப் பின்னர், முறையே இவற்றில் வெளிப்படும் விகாரங்களைக் கூறி, அவை உலகாய் நிகழ்ந்து, பின் தாம் வந்தவழியே சென்றடங்கும் தன்மையைக் கூறி, முக்குணமன்றிச் செயலெதுவும் நிகழ்ந்திடாத தென்பதை முற்றும் நவின்று, நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், மெய் வாய் கண் மூக்குச் செவி யாகுமென்ப துரைத்துப் பின்னும் பலவும் கூறுவது தெளிய நூலில் கண்டு கொள்க.

## வைசேடிக, பூதவாதங்கள்.

பின்னர், வைசேடிகவாதியை யடைந்து நின் வழக்குரையென்ன அவனும் "பொருளும், கரணமும், கருமமும், சாமானியமும், விசேடமும், கூட்டமுமாகிய ஆறுகூறுகள் உண்டு. அவற்றுள் பொருளென்பது குணமும் தொழிலும் உடையதாகி, எத்தொகைப் பொருளுக்கு மேதுவாம். பொருள் ஒன்பது வகைத்து. அவை, ஞாலம், நீர், தீ, வளி, ஆகாயம், திசை, காலம், ஆன்மா முதலியனவாம். இவற்றுள் நிலம் ஒலி, ஊறு, நிறம், சுவை, நாற்றமாகிய ஐந்து குண முடையது. அது நீங்க நின்ற நான்கும் சுவைமுதல் ஒவ்வொரு குணத்தைக் குறைவாக உடையன. அதாவது, நீர் சத்த முதலிய நான்கு குணங்களையும், தீ சத்தம் முதலிய மூன்றினையும், காற்று சத்தம் முதலிய இரண்டினையும், ஆகாயம் சத்தம் ஒன்றினையு முடையது. பெருமை,

சிறுமை, வன்மை, மென்மை, சீர்மை, நொய்ம்மை, வடிவம், நீர்மை, பக்கம் முதலாக பலவும் பொருள்களின் குணங்களாகும். அப்பொருளும் குணமும் கருமங்களை இயற்றற் குரியன. சாதலும் நிகழ்தலும் அப் பொருளின் தன்மை" என்றிவ்வாறாகக் கூறினன். பூதவாதி தனது கொள்கைப்படி ஐம் பூதங்களின் தன்மையும், பூத வழியாகப் பிறந்திடும் உலகத் தோற்றத்தையும் உணர்த்தினன். இவ்வாத வகைகளை நூலிற் காண்க. முதுமை வாய்ந்த சங்க இலக்கண நூலாகிய தொல்காப்பியமும், "நிலந் தீ நீர் வளி விசும்போ டைந்தும், கலந்த மயக்கம் உலகம்" என்று (மரபி. 8 9) உலகம் ஐம்பூதச் சேர்க்கையா லாயதென்று தமிழர்க் கொண்டிருந்த கருத்துப்படி கூறுதல் காண்க. புறநானூற்றிலும் இங்ஙனமாகக் கூறப்படுதல் காண்க. (செ. 2.)

மதங்கள் ஐந்தெனல்.

மேற் கூறிவந்த சமயங்களுள், மணிமேகலை, முதற்கண் கூறிய ஐந்து மதத்தினரையும் ஒன்றனுள் ளடக்கி ஒன்றெனக் கொண்டும், ஆசீவகர், நிகண்ட மிரண்டினையும் ஒன்றாகச் சேர்த்து இரண்டெனக் கொண்டும், எஞ்சியமூன்றும் தனித்து ஒவ்வொன்றாகக் கூட்டியும் முடிவாக ஐந்து மதத்தினரின் கொள்கைகளையம் முறையே அவ்வம்மதத்தினரிடத்து அறிந்து கொண்டதாகக் கூறப்படுதல் காண்க. 'தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதை'யிலும், மணிமேகலை, அறவணரிடத்துததான் வெவ்வேறுரைக்கும் நூற்றிறச் சமய நூல்களின் பொருள்களை வஞ்சி நகரில் கேட்டு, ஐந்து விதமாக உரைத்திடும் அக் கொள்கைகள் தன் மனதிற்குப் பொருந்தாமையால், அவையும் தான் கொண்டிருந்த வேற்றுருவமும் துறந்து, மெய்ப்பொருளை அறிந்திட அவர்பால் வந்ததாக மொழிவது நோக்குக. இவ்வாறே கண்ணகித் தெய்வமும்,

"முறைமையி னிந்த மூதா ரகத்தே
யவ்வவர் சமயத்தறி பொருள் கேட்டு
மெய்வகை யின்மை நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோன் பிடகநெறி கடவாய்." (26: 63-6)

எனத் தான் முன்னரே பிறமதங்களை மெய்யற்றன என்று துணிந்து கொண்டுள்ளதாகவும், அது மணிமேகலைக்கும் தானாகவே விளங்குமென்றும் கூறியதாக உள்ளன. பேதமான கொள்கைகளைக் கொண்ட மதங்கள் ஆறு உண்டென்பது அக்காலத்திய புத்தர்களின் எண்ணமென்பது இதனால் விளங்கும். அவ்வாறினுள் அவர் தமது மதமு மொன்றாகும். இந்த ஆறினையே அளவை வாதியின் வாதமுடிவில் ஆசிரியர் குறித்துள்ளனர் போலும். "ஐவகைச் சமயமு மறிந்து" எனப் பெருங் கதையிலும் வருதல் காண்க. (உஞ்சைக் காண்டம்.) (தொடரும்.)

---

# பரதன் பெற்ற புகழ்

—(0)—

(எஸ். கிருஷ்ணன்.)

வேதியர், அருந்தவர், விருத்தர், வேந்தர் ஆகியர் நிறைந்திருக்கும் அரச சபையில் பரதன் வருகின்றான். "அண்ணனோ காடு புகுந்தார். தந்தையோ வீடு புகுந்தார். நான் நாடு புகுந்து அரசாள்வதா?" என எண்ணி, அண்ணனை அழைத்து அரச பதவி வகிக்கத் தூண்ட எண்ணங் கொண்டு வருகின்றான் பரதன். அவன் முகக் குறிப்பி னின்றே அகத்தின் தன்மையை உணர்ந்த வசிட்டர் பக்குவமாகக் கூறி பரதனை முடி சூடும்படி செய்யக் கருதி "அப்பா! வயிரவாள் தரித்த அரசனிலாத பூமி சூரியனில்லா பகலையும், சந்திரனிலா இரவையும், உயிரில்லா உடலையும் ஒக்கும் என்பார்கள். தேவர்கள், அசுரர்கள் உலகங்களிற் கூட அரசர்கள் இருத்தல் கண்கூடு. நமது நாட்டிலோ தற்பொழுது அரசனிலா திருப்பது அழகல்ல. ஆதலின்,

"உந்தையோ இறந்தனன் உம்முன் நீத்தனன்
வந்தது மன்னைதன் வரத்தின் மைந்தநீ
அந்தமில் பேரரசு அளித்தி"

உன் தகப்பனோ இராமன் பிரிந்த ஏதுவால் விண்ணுல கடைந்தான். உன் முன்னவனோ தந்தை சொல்லை சிரமேற் கொண்டு காடு புகுந்தான். இவையெலாம் உன் தாயாகிய கைகேயியால் வந்தது எனினும், தந்தையும் இராமனும் பிரிந்த விடத்து பட்டம் உனக்கே யுரியதல்லவா? ஆகவே, நீ இராஜ்ய பாரத்தை வகிப்பாயாக. நீ அரச பதவியேற்றல் வேண்டுமென்று நான் மாத்திரம் விரும்புவதாக எண்ணி விடாதே. தஞ்சம் என்று உலகம் உன்னைக் கெஞ்சுகிறது. மறுக்காதே அதனை" எனக் கூறுகிறார்.

அண்ணனை அழைத்து வந்து அரியாசனத்தில் அமர்த்தி அவனுக்குத் தொண்டு புரிய எண்ணங் கொண்ட பரதனு வசிட்டரின் கருத்துக்கு இணங்குபவன்?

வசிட்டன் கூறிய சொற்கள் பரதன் செவியிற் பட்டவுடன் 'நஞ்சுண்' என ஒருவனிடம் கூறிய மாத்திரத்தில் அவன் உடம்பும் மனதும் எவ்வாறு நடுங்குமோ அதுபோன்று பரதனின் உடம்பும் மனதும் நடுங்கின. இவ்வித கடூரமான வார்த்தை கேட்கவும் காலம் வந்ததே என்பதாக நினைத்த பரதன் கண்கள் நீரை ஆறாகப் பொழிந்தன. தம் குருவும் இதரர்களும் 'நீயே அரசு புரிதல் வேண்டும்' என வேண்டிக் கொள்கிறார்களே! அவர்கள் வார்த்தையை எவ்வாறு தடுப்பது? அவர்கள் கருத்தின்படி நடந்தாலோ 'பரதன் அரச பதவியை ஆசித்து தந்தையைக் கொன்று முந்தியவனைக் காட்டிற் கோட்டினன்' எனும் அவச்சொல் வருமே! யாது செய்வது என

எண்ணி பரதன் மயங்குகிறான். பதில் சொல்ல நினைக்கிறான். நா தடுமாறுகிறது. பின்னர் துணிந்து,

"வேத்தவை யிருந்தநீர் விமல னுந்தியில்
பூத்தவன் முதலிய புவியிட் டோன்றினார்
மூத்தவ ரிருக்கவே முறைமை யானிலம்
காத்தவ ருளரெனிற் காட்டிக் காண்டதால்"

மகா விஷ்ணுவின் உந்திக் கமலத்திலிருந்து தோன்றிய பிரமனை முதலாக வுடைய இவ்வுலகில் எங்காவது மூத்தவனிருக்க அவனை விடுத்து இளையவன் ஒருவன் அரசு புரிந்து வருவதைக் கண்டிருப்பீர்களா? கண்டிருப்பீர்களானால் எனக்கு விளக்கிச் சொல்லுங்கள் என பரதன் சபையினரைக் கேட்கின்றான். சபையோர் மவுனஞ் சாதிக்கின்றனர்.

ஆகவே, நீங்கள் என்னதான் கூறினாலுஞ் சரி. ஸ்ரீ ராமபிரானை அழைத்து வந்து நானே அவர்க்கு முடி சூட்டுவேன். அதற்கு என் அண்ணல் இணங்காது போனால் யான் உயிர் வாழேன. அன்றேல் அன்னவரிடம் சென்று அவருக்குத் தொண்டு புரிதலாகிய தவஞ் செய்வேன். மீட்டும் மீட்டும் என்னை நீங்கள் வற்புறுத்தல் அழகல்ல. வற்புறுத்தினால் என் உயிரை இப்பொழுதே இங்கேயே விட்டு விடுவேன் என தீர்மானமாகப் பரதன் உரைக்கின்றான்.

பரதனின் சகோதர பக்தியை எவரால்தான் மாற்ற முடியும்? அரச பதவியை விட அண்ணனே உயர்ந்தவர் என நினைக்கும் பரதனின் தூய மனதிற்கு ஈடாக எதைத்தான் உரைக்க முடியும்? ஆகவே, அவன் மனதின் படி விட்டு விடுதலே சாலச் சிறந்தது என உணர்ந்த சபையினர், பரதா! நீ,

"வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளா? நின்னிற் றோன்றினார்"

எவருக்கும் கிடைத்தற்கரிய இவ் வயோத்தி அரசுரிமையை துச்சமென நினைத்து மறுத்து விட்டாய். உன்னைப் போன்ற தியாகிகள் இவ் வுலகில் எவர் முன்னர் இருந்தார்கள்? இப்பொழுது இருக்கின்றார்கள்? இனிமேல் இருக்கப் போகின்றார்கள்?

"ஆழியை யுருட்டியும் அறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
ஏழிரே டேழனு முலகு மெஞ்சினும்
வாழிய நின்புகழ்"

ஆக்கினை சக்கரத்தை செலுத்தியும் தான தருமங்கள் செய்தும் வேள்விகள் இயற்றியும் புகழடைய உலகோர் முயலுகிறார்கள்? எனினும் அவர்கள் புகழ் அவர்கள் மடிந்தபோதே மாய்ந்து விடுகிறது. நீயோ ஏழேழு பதினான்கு உலகும் அழிந்த போதினும் அழியாத புகழை உலகில் நாட்டி விட்டாய். உலகினர் சோதர அன்பிற்கு "பரதனையும் ராமனையும் பார்" என எடுத்துக் காட்டும் நிலையில் உன் புகழ் நிலைத்து விட்டது. உனக்கு புத்தி யுரைக்கவும் சத்தியில்லை எங்களுக்கு. உலகம் உள்ளளவும் உன் புகழ் வாழட்டும் என வாழ்த்தினார்கள்.




## 49. II. பார்லிமெண்ட் சீர்திருத்தங்கள்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

சகல விஷயங்களிலும் அபிவிருத்தி யடைந்து, ஜனநாயக தத்துவத்தை ஸ்தாபித்து, மற்ற தேச ஜனங்களுக்கு அரசியல் முறைகளில் ஓர் உதாரணமாக இங்கிலாந்து நிர்வாகம் இருந்த போதிலும், வாக்கு சுதந்திரம் நிலச்சுவான்தாரர்களுக்குத் தான் இருந்தது. தேர்தல் தொகுதிகளும், முன்பு ஒரு காலத்தில் எட்வர்ட் I ஆல திட்டஞ் செய்யப்பட்ட பிரகாரமே யிருந்து வந்தன. பாழ்த்த பிரதேசங்களுக்குப் பிரதிநிதித்வமும் உண்மையில் பல காரணங்களால் ஜன நெருக்கம் ஏற்பட்ட புதியபிரதேசங்களுக்கு பிரதிநிதித்வம் இல்லாமலும் இருந்தது. எவ்வளவு செல்வம் படைத்தவர்களாயினும் நிலச்சுவான்தா ரல்லாதாருக்கு வாக்குரிமையோ, பிரதிநிதித்வமோ கிடையாது. ஆக இந்த நிலைமையைச் சீர்திருத்துவதற்குச் செய்யப்பட்ட திரிகரண சுத்தியான முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. பிரஞ்சுப் புரட்சியில் நடந்த அட்டூழியங்களில் பல, தீவிர தாராளப் போக்குடையவர்களையும் பிற் போக்காளராக்கி விட்டது குறிப்பிடப் பட்டிருக்கிறது. எவ்வளவு அவசியமான திட்டமானாலும் பிரபுக்கள் சபை விவாதங்களில் அடிபட்டுப் போய்விடும். ஆகையினால் தொழிற் புரட்சி மூலம், நாட்டிலும் சமூக அமைப்பிலும் தீராமல் ஏற்பட்ட மாறுதல்களுக்கு ஏற்றவாறும், கஷ்டங்களை நிவர்த்திப்பதற்கும் வழியில்லாது உண்மைத தேசாபிமானிகள் தத்தளித்தனர். ஆனாலும் வெகு ஜன உணர்ச்சியின் வேகம் வீண் போகாது அல்லவா? வாக்குரிமை பொதுஜனங்களுக்கு ஏற்பட்டால் ஒழிய தங்களுக்குள்ள பலவித கஷ்டங்களுக்கும் நிவாரணம் கிடைப்பது துர்லபம் என்ற தீவிர உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. அது சம்பந்தமாக, நெப்போலியன் வீழ்த்தப்பட்டு ஸெயிண்ட் ஹெலினாவில் சிறைவைக்கப்பட்ட அப்பொழுதே கலகங்களும், கிளர்ச்சிகளும் ஏற்பட்டன. கலகங்கள் கிளர்ச்சிகள் என்றால் ராணுவச் சட்ட அமுலும், அடக்கு முறைகளும், சுட்டு வீழ்த்துதலும் ஏற்படவும் செய்தன. இந்த மாதிரியான அஸமபாவித நிலைமையைப் போக்கடிக்கக் கூடிய பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பது அவசியமாகியது. நிர்வாகத்திலிருப்பவர் ள் இந்த முயற்சிகளுக்கு செய்யக் கூடிய எல்லாவித இடையூறுகளை, சட்ட பூர்வமாகவும், தந்திரங்களின் மூலமும். சூழ்ச்சிகளினாலும் முயலவும் செய்தனர்! என்ன செய்து பலனென்ன? முடிவில் வெகு ஜன உணர்ச்சிதான் வென்றது என்பதைச் சொல்லவே தேவையில்லை. அந்த வெற்றி, 1832லும், 1867லும், 1885லும, முடிவாக 1918லும் ஏற்பட்டுத் தான் தற்போதைய தாராள நிலைமையில ஆங்கிலேயரைப் பொறுத்த மட்டில் இருக்க நேர்ந்தது என்பது, நம் நாட்டினருக்கு உணர்ந்து கொள்ள வேண்

டிய சிறந்த சரித்திரப் படிப்பினை. அவற்றின் விபரச் சுருக்கம் பின் வருமாறாகும்.

ஜார்ஜ் III இறந்த பிறகு அவருடைய குமாரர் ஜார்ஜ் IV 1820 லிருந்து, 1830 வரையில் ஆண்டார் அவர் காலத்திய அரசியல் நிர்வாக விசேஷம் என்னவெனில், அவருடைய தகப்பனர் வெகு பாடுபட்டு திண்டாடி மண்டை கலங்கி, மூளையும் குழம்பி, சம்பாதித்த அரசருடைய உரிமைக ளெல்லாம், காளடைவில் நழுவி மந்திரி சபையின் ஆதிக்கமும், கக்ஷித் தலைவர் செல்வாக்கும் புனருத்தாரணம் அடைய ஏற்பட்டது அவருக்கடுத்து அவருடைய சகோதரர் வில்லியம் IV அரசுரிமை பெற்றார். அவருக்கு "மாலுமி அரசன்" என்ற பெருண்டு. உல்லாசப் போக்கும், நல்லெண்ணமும், நற்குணமும் வாய்ந்தவரெனவும் ஆனாலும் அறிவு வன்மை அவ்வளவில்லாத தன்மையில் ஒரு விதமான கிறுக்குப் போக்குள்ளவரெனவும் சொல்லப்படுகிறது. 1832ல் விக் கக்ஷியினரின் தலைவரான க்ரே பிரபு (Lord Grey) என்ற ஒருவரால் சீர்திருத்த மசோதா ஒன்று தயாரிக்கப் பட்டதாம். ஆனால் அப்போதைய பிரதம மந்திரி வெல்லிங்டன் பிரபு (வாட்டர்லூ வீரர்) இந்த மசோதாவுக்கு எதிரிடையாக இருந்து தடுத்தாராம். ஆகவே அவர் அதிகாரத்தினின்றும் விரட்டப் பட்டாராம் உடனே க்ரேபிரபு மந்திரி சபையை யமைத்துக் கொண்டு மறுபடியும் சீர்திருத்த மசோதாவை ஆஜர்ப் படுத்தினாராம். பலத்த விவாதங்கள், ஆர்ப்பாட்டங்கள், பல விடங்களில் கலகங்கள் ஏற்படவே செய்தனவாம். பிரபுக்கள் சபையில் பிரமாதமான முட்டுக் கட்டைக்கு முஸ்தீபுகள் இருந்தனவாம். ஆகக் கூடி, "ஊர் கூடி செக்குத் தள்ளி, அரட்டி, உருட்டி, வெருட்டி, நயந்து," புரபுக்கள் எதிர்ப்பும் சமாளிக்கப்பட்டு டோரி பிரபுக்கள் ஒதுங்கி நின்று, விக் கக்ஷி பிரபுக்களே யுள்ள பிரபுக்கள் சபையிலும் ஆமோதிப்புபெற்று சட்டமாகி விட்டது. இதுவே முதல் சீர்திருத்த சட்டம்.

அதன்படி அநேக வாழ்த்த பிரதேசங்களைத் தொலைத்து, புதிய பட்டணங்களையும், பிரதேசங்களையும் ஓட்டுரிமையுள்ளவர்களாகச் செய்தார்கள். பிரபுக்கள் வசமே யிருந்த வாக்குரிமை, நடுத்தரப்பட்ட ஜனங்களான, பசையுள்ள மத்திய வகுப்பு ஜனங்கள், தொழில் முதலாளிகள், பெரிய வர்த்தகர்கள் ஓட்டுரிமை பெற்றவர்கள் ஆனார்கள் கேவலம் நிலச்சுவான்தாரர்களுக்கு மட்டும் இருந்த வாக்குரிமை அவர்களைப் போன்றே செல்வாக்குப் பெற்ற மற்றவர்களுக்கும் ஏற்பட்டது தான் சாராம்சம். மற்றப்படி சாதாரண மத்திய வகுப்பினரோ, சிறந்த தொழிலாளரோ விவசாயிகளில் சாமான்யமானவர்களுக்கு இன்னும் வாக்குரிமை வரவில்லை யானாலும், நிலச்சுவான்தாரர்களின் ஆதிக்கம் கொஞ்சம் குறையலாயிற்று எனலாம். அதை யனுசரித்து, நீக்ரோ அடிமைத்தனம் நீங்க சட்ட மேற்பட்டது. எளியவர்களுக்கான சட்டம் ஏற்பட்டது. முனிஸிபாலிடிகள் போன்ற ஸ்தல சுயவாட்சி ஸ்தாபன அமைப்புகளிலும சீர்திருத்தமும் அபிவிருத்தியும், வில்லியம் IVன் ஆட்சி காலத்திலேயே ஏற்பட்டு, சொல்ப சௌகரியங்களுக்கும் வழி உண்டாகி விட்டது. நகர பரிபாலன சபைகளின் மூலம் சில நன்மைகளும் உண்டாக ஹேதுவாயிற்று.

வில்லியமுக்குப் பிறகு, கீர்த்தி பெற்ற விக்டோரியா மஹாராணியார் பட்டம் பெற்று ஆட்சி செய்த காலத்தில் 1867ம் வருஷத்திய இரண்டா

வது பார்லிமெண்ட் சீர்திருத்த சட்டமும், 1885ம் வருஷத்திய மூன்றாவது பார்லிமெண்ட் சீர்திருத்த சட்டமும் ஏற்பட்டன! அவைகளுக்கு ஆரம்பதமாக பொது ஜனங்களிடையில் "பத்திரக் காரர்களின் இயக்கம்" என்று பொருள் படக் கூடிய (The Chartist's movement) தோன்றியது. இந்தப் பெயர் வழக்கம் போல, எதிரிகளால் பரிகாசார்த்தமாக ஏற்பட்டதாகும். ஏனெனில் அந்த பத்திரக்காரர்கள் தங்களுடைய முக்கிய கோரிக்கைகளை எழுதி அதுதான் ஜீவாதாரமான உரிமைச் சாசனம் என்று சொல்லிக்கொண்டு அவைகளைப் பொது ஜனங்கள் அடைந்து தீரவேண்டிய அவசியங்களை வற்புறுத்தி. பிரசாரம் செய்து கிளர்ச்சி செய்து கொண்டு குழப்பங்களை விளைவிக்கலாயினர். அவைகளில் முக்கியமானவை. (1) சொத்துரிமையைப் பொறுத்ததான வாக்குரிமை என்பது கூடாது. (2) வயது வந்த ஆண் பெண் அடங்கலுக்கும் தனித் தனி வாக்குரிமை யளிக்கப்பட வேண்டும். (3) பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்குச் சம்பளமும் படியும் கொடுக்க வேண்டும். (4) இரகசியமாய் ஓட்டு கொடுக்க சாதகம் செய்யப்பட வேண்டும். (5) பார்லிமெண்டுக்கு அங்கத்தினர்கள் பிரதி வருஷமும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (6) தேர்தல் தொகுதிப் பிரதேசங்கள் சமஜனத் தொகை உள்ளவாகப் பிரிக்கப்பட்டு பிரதிநிதிகள் சமமாக நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பனவாகும். இவைகள் அவ்வளவும் நாளடைவில்தான் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பொருளாதார தொழில்முறை நிலைமைகளின் சீர் கேட்டினாலும் இவ்வித உரிமைகளின் அவசியம் அறிவாளிகளின் மனதில் உணர்ச்சியை உண்டாக்கியது. (அவ்விஷயங்கள் தொடர்ச்சிகளில் உசிதப்படி எழுதப்படும்) ஐரோப்பாவில் நடந்த க்ரிமியன் போர் (The Cremean war) 1856-ல் நடந்த பாரிஸ் சமாதானப் பிரகாரம் முடிவடைந்த பிறகு, அப்போது பிரதம மந்திரியாக 1865-ல் ஜான் ரஸ்ஸல் பிரபு என்பவர் ஆனார். அந்த சமயம் மந்திரிசபையில் இருந்த தாராள சிந்தனைகொண்ட க்ளாட்ஸ்டன் (Gladstone) என்பவர் மிகுந்த செல்வாக்குள்ளவராக விளங்கினர். அவருடைய முயற்சியின் பேரில் இரண்டாவது பார்லிமெண்ட் சீர் திருத்த சட்டம் பிரேரேபிக்கப் பட்டது. ஆனால் அது பெரும் பான்மையோரின் அங்கீகாரம் பெறாததால், நிர்வாக முறையின்படி ரஸ்ஸலும் க்ளாட்ஸ்டனும் பதவிகளை ராஜீனமாச் செய்துவிட்டார்கள். குறுகிய நோக்கமுள்ள கன்ஸர்வேட்டிவ் கக்ஷித்தலைவராக இருந்த டெர்பி பிரபு (Earl Derby) பிரதம மந்திரியானர். பார்லிமெண்டில் மிகுந்த செல்வாக்கு பெற்றிருந்த டிஸ்ரேலி (Disraeli) என்ற மற்றொருவர். சீர்திருத்தத்தின் அவசியத்தை நன்குணர்ந்தவராய், க்ளாட்ஸ்னுடைய மசோதாவில் சில மாறுதல்களைச் செய்து பார்லிமெண்டில் ஆஜர் படுத்தினர். அதுதான் 1867-ல் சட்டமான இரண்டாவது பார்லிமெண்ட் சீர்திருத்தம். (The Secorb Reform Act.) அதன்படி பட்டணக் கரைகளில் வருஷவாரியில் £ 12 குடிக்கூலியோ வாடகையோ உள்ளவர்களுக்கு வாக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டது. ஜில்லாக்களில் வருஷ வாரியில் £ 12 நிலவரி கொடுப்பவர்களுக்கும் வாக்குரிமை யளிக்கப்பட்டது. சிறிய பட்டணங்களில் சில, பிரதிநிதித்வத்தை இழந்தன. அதே போன்று சில ஜில்லாக்களுக்கும் ஆகி, இதில் எஞ்சிய பிரதிநிதிகள் பெரிய பாகங்களுக்கு சவித்து வழங்கப்பட்டது. இதில் சாதாரண மத்திய வகுப்பு ஜனங்களிடம் செல்வாக்கு வரத் தலைப்பட்டது. தொழிலாளரில் பலருக்கும் வாக்குரிமை ஏற்பட்டதுதான் விசேஷம்,

அடுத்த மூன்ருவது சீர்திருத்தச்சட்டம் 1885-ல் ஏற்பட்டது. அதற்குள் கட்டாய ஆரம்பக் கல்விச்சட்டம் (The compulsory Elementary Education act.) 1870-லும், இரகசியமாய் வாக்களிக்க சாதனம் அளிக்கும் (Vote by Ballot Act)பாலட் ஓட்டுமுறைச் சட்டம் 1871-லும் ஏற்பட்டன. இந்த முறையினல் முதலாளிகளுக்குப் பயந்துகொண்டே தொழிலாளிகள் ஓட்டுச் செய்யும் பயம் நீங்கியது என்று சொல்லப்படுகிறது. முந்தைய சட்டத்தால் 12 வயதுக்குள்பட்ட ஒவ்வொரு குழந்தையும் கட்டாயமாகப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட வேண்டும் என்று ஏற்பட்டது (இதற்குத்தான் கோகலே ஆரம்பித்து, அலறி முறையிட்டும், நமது மாகாணத்தில் மெள்ள மெள்ள பயத்துடனும் பல ஆபத்துகளுக்கும் நிப்பந்தங்களுக்கும் அனுதாபமின்மைகளும் ஆளாகி, ஏகதேசத்தில இரண்டொரு இடங்களில் அரை மனதுடனும வேண்டாத வெறுப்பாகவும் திட்டங்கள் தோன்றுகின்றன. இனி, "இது பூர்த்தியாக அமுலுக்கு வருவதெக்காலம்?" என்று கண்ணிகள் பாடி வருந்த வேண்டியதுதான்) நிற்க ஐரிஷ்காரர்கள் சுய ஆட்சி வேண்டுமென்று பல அரும்பெரும் தலைவர்களின் தலைமையில் சீறிக்கொண்டு இருந்த நிலைமையில், 1884-ல் க்ளாட்ஸ்டன் இரண்டாம் முறையாக பிரதம மந்திரி ஸ்தானம் வகித்த காலத்தில், மூந்திய இரு சட்டங்களின் காரணத்தால், மறுபடியும் ஒரு சீர்திருத்த முயற்சி செய்யப்பட்டது. ஏனெனில் சாதாரண குடியானவர்களுக்கும், தொழிலாளிகளுக்கும் வாக்குரிமையில்லாதிருந்தது. ஆக இந்த மூன்ருவது பார்லிமெண்ட் சீர்திருத்த சட்டம் தெய்வானுகூலத்தால் க்ளாட்ஸ்டனல் பார்லிமெண்டில் சமாப்பிக்கப்பட்டு சட்டமாகவும் ஆகிவிட்டது. அதன்படி நாட்டுப் புறத்திலுள்ள வீட்டுச் சொந்தக்காரர்களுக்கும், ஏழைக் குடியானவர்களுக்குங்கூட வாக்குரிமையளிக்கப்பட்டது. சமஜனத் தொகையுள்ள பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு பிரதிநிதிவீதம் தெரிந்தெடுக்கப்பட திட்டமாயிற்று. இதனல் சாமான்ய ஏழை ஜனங்களுக்கும் கூலிக்காரத் தொழிலாளிகளுக்கும் வாக்குரிமை வந்ததுதான் குறிப்பிடப்பட்டது. நிர்வாகம் ஏற்படுத்தும் சக்தி எளியவர்களிடமே வந்ததெனச் சொல்லலாம்.

கடைசியாக, காலஞ் சென்ற மாக்ஷிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் அரசர் காலத்தில் 1918-ல், ஜெர்மனியுத்தம் தத்காலீகமாக முடிவடையும் போக்கிலிருந்த சமயத்தில் லாயிட் ஜார்ஜ் பிரதம மந்திரித்வகாலத்தில் ஏற்பட்டது ஒரு பார்லிமெண்ட் சீர்திருத்த சட்டம். அதுதான் இங்கிலாந்து வாசிகளை தற்காலத்திய நிலைமைக்கு வைத்தது. அதன்படி சொத்துரிமை என்ற பேச்சே எடுக்காதபடி, மேஜர் ஆன (வயதுவந்த) எந்த ஆணுக்கும், பெண்ணுக்கும் 'வாக்கு' அளிக்கும் உரிமையுண்டு என்று ஏற்பட்டது. (மைனராக இருக்கக் கூடாது, புத்தி ஸ்வாதீனம் இல்லாதவராக இருக்கக் கூடாது. தண்டனைப் பெற்ற குற்றவாளியாக இருக்கக் கூடாது. அன்னியராக இருக்கக் கூடாது. இதுகளில் அகப்படாத தனிப் பட்டமுண்ட ஆட்களுக்கு ஆண் பெண் அடங்கலுக்கும் ஓட்டுரிமையுண்டு.) ஏறத்தாழ சமஜனத் தொகையுள்ள தேர்தல் பிரதேசங்களாக பிரிக்கப்பட்டது. அதிக பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்பட ஹேதுவாகியது பத்திரக்காரர்களின் கோரிக்கைகளில் பெரும்பாலானவை பொதுஜன உரிமையாக, ஒன்றன் பின் ஒன்ருய் நாளடைவில் வந்துவிட்டது குறிப்பிடத்தக்கது. ஆனலும் இன்

றைய நிலையில் பொது ஜனங்களின் ஆதிக்கம்தான் நடைபெறுகிறதென்று கூர்ந்து கவனிப்பவர்களுக்குத் தோனறுகிறதில்லை. முதல் வட்டமேஜை மகாநாடு முடிந்த அந்த சந்தர்ப்பத்தில் நடந்த இங்கிலாந்து பொதுத் தேர்தலின்போது பொது ஜனங்களில் தொழிலாளரின் கட்சியினர் என்ற தொழிற் கட்சியினர் தோற்றதும், கன்ஸர்வேடிவ் கக்ஷியினரே பெரும்பான்மையினராகி விட்டது நேயர்கள் பலரும் அறிவார்கள். கொள்கையற்ற ராம்சே மக்டனல்ட் ஆதியில் தொழிற் கட்சியிலிருந்து ராஜீநாமாச் செய்தவர், தேசியத் தொழிற்கட்சி என்று வெகு சொல்ப சிறுபான்மையான கட்சியில் வெற்றிபெற்று, தேசியக் கட்சி என்று சொல்லிக்கொண்ட கன்ஸர்வேடிவ் கக்ஷியினருடன் சேர்ந்து, ஓட்டிக்கொணடு தொஙகி திண்டாடி ராஜீநாமாச் செய்ய நேர்ந்ததும் அறிந்த விஷயம். மாக்டோனல்டுக்காக பல ஆகாயக் கப்பலகளும், ஆயிரக்கணக்கான பவுன்களும், நூற்றுக்கணக்கான மோட்டார்களும் வேலை செய்ததும் பத்திரிகைகளில் வந்த விஷயங்கள். ஆக "பணந்தான் பாதாளம் வரையில் பாயும். பணந்தான் பல செய்யும். பணம்தான் பந்தியில்" என்பதுதானே என்று ஐயுறும் நிலைமையில்தான் அவர்கள் இருக்கின்றது வெட்ட வெளிச்சமாகும். அதை யனுசரித்துத்தான் நமது சமீப தேர்தலிலும் பண மூட்டைகள் சஞ்சாரம செய்து பார்த்து, நூற்றுக்கணக்கான பேர்களுக்கிடையில் ஒரு சிலாமட்டும் வெற்றி பெற்றதாகச் சொல்லிக்கொண்டு திணறிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் காண்கிறோம். ஆனல் மேற்கு நாடுகளைப் போன்று முரட்டுத்தனமான, பலாத்காராம் இன்றி, அஹிம்சா முறையின் செல்வாக்கு மேலோங்கி வருவது நற்காலத்தின் அறிகுறியாகவும் இருக்கிறது.

அடுத்து ஐயர்லந்து சுயராஜ்ஜிய முயற்சியைப்பற்றி சுருக்கமாக எழுதுவது ஆகும்.

---

# கோழி வளர்த்தல்

(ஸ்ரீமதி-O. P. தேசிகன்.)

## I

இதுகாலை உலகத்தில் முன்னேற்ற மடைந்திருக்கும் நாடுகளில் எல்லாம் கோழிகளை வளர்த்து விருத்தி செய்வது மிகவும் இலாபகரமானதோர் தொழிலாக நடைபெற்று வருகிறது. மிகப் பெரும்பான்மையான மக்களின் தினசரி உணவுத் திட்டத்தில் கோழிமுட்டைகளும், அவற்றைச் சேர்ந்த பதார்த்தங்களும் சம்பந்தப்படவேண்டியிருப்பதைக் கவனிக்கையில் அஃதோர் அதிசயமாகாது. மேனாடுகளில் அமெரிக்க ஐக்கிய மாகாணங்களிலேயே இத்தொழில் மிகவும் முன்னேற்ற மடைந்திருக்கிறது. ஆதலின் அத்தேசமே இதுபோழ்து இத்தொழிலில் எவ்வளவு மேன்மையான நிலைமையி லிருந்துவருகிற தென்பதற்கு, இந்த வியாபாரத்தின் அபிவிருத்தியை ஏனைய கைத்தொழில்களின் வளர்ச்சியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அதனுடைய மதிப்பும், அளவும் எவ்வளவு பிரம்மாண்டமானதாக யிருக்க வேண்டுமென்பது விளங்கும்,

### யுனைடெட் ஸ்டேட்ஸின் அபரிமிதமான வியாபாரம்.

1923-ம் வருஷத்தில் வெளியிடப்பட்ட ஓர் சர்க்கார் யாதாஸ்திலிருந்து அவ்வருஷத்தில் கோழி வளர்க்குந் தொழிலினின்றும் 10,47,000,000 டாலர்கள் பெறுமானமுள்ள பண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டதாகத் தெரிய வருகிறது. அதாவது, இந்த இனத்தில், அத்தேசத்தில் அவ்வருஷம் உற்பத்தி செய்யப்பட்ட பேடெண்ட் மருந்து தினுசுகள், ரசாயன மருந்துகள், வாசனைத் திரவியங்கள் இவைகளின் வியாபாரத்தைக் காட்டிலும் மூன்று மடங்கும், யுனைடெட் ஸ்டேட்ஸின் ஸோப்பு வியாபாரத்தைப் போன்ற 5 மடங்கும், வர்த்தகம் நடந்திருக்கிறது. தவிரவும், அவ்வருஷத்திய கோதுமையுற்பத்தியின் மதிப்பைக் காட்டிலும், இந்த வியாபாரத்தில் 300,000,000 டாலர்கள் அதிகப்படியாகக் கிடைத்திருக்கிறதாம். அன்றியும், கரும்பு சாகுபடியைக் காட்டிலும் எழுபங்கும், புகையிலை மாலைக் காட்டிலும் 5 பங்கும் அதிகப்படியான வருமானம் கோழி வளர்ப்பின் பயனாகக் கிடைத்திருப்பதாகக் கணக்கு விவரங்கள் அறிவிக்கின்றன இவையனைத்தையும்விட யுனைடெட் ஸ்டேட்ஸ் சர்க்காரின் தபால் இலாகா முழுவதிலும் அவ்வாண்டு தபாற் கட்டணங்களில் எவ்வளவு தொகை வசூலிக்கப்பட்டதோ அதைப்போன்ற இருமடங்கு பெறுமானமுள்ள தொகை இவ்வியாபாரத்தில் புழங்கியிருப்பதை யுத்தேசிக்கையில் கோழி வளர்க்குந் தொழிலானது இந்தியாவில் பலர் நினைப்பதைப்போல அலட்சியம் செய்யப்படக்கூடிய தல்லவென்பது விளங்கும்.

மேற்கூறிய புள்ளி விவரங்களில் சிறிய பட்டணங்களிலும் உள்நாட்டுப் பிரதேசத்திலுள்ள கிராமாந்தரப் பகுதிகளிலும் சிறிய அளவில் வளர்க்கப்படும் கோழிகளின் எண்ணிக்கை அடங்கி யிருக்கவில்லை. பெரிய பட்டணங்களில் வியாபார தோரணையில் நடைபெறும் கோழி வளர்ப்புப் பண்ணைகளின் மூலமாகக் கிடைத்தவருமானமே குறிப்பிடப்பட்டுள்ளது. சிகாகோ பட்டணத்தில் மாத்திரம் ஒவ்வொருநாளும் 12 மோட்டார் லாரிகளில் ஏற்றக்கூடிய கோழிகளுக்கான தீனி வகைகள் செலவாகின்றனவாம்.

பிரதிதினமும் நியூயார்க்கு நகரம் மட்டும் எழுபதுலட்சம் முட்டைகளுக் கதிகமாக உபயோகப்படுத்துகிறது. அதன் மதிப்பு 300,000 டாலர்கள் ஆகும். வருஷ வாரியில் 20 கோடி பவுண்டு நிறையுள்ள கோழியிறைச்சி அந்தப் பட்டணத்திற்குத் தேவையாக யிருக்கிறதாம். அன்றியும் 34 பெரிய வண்டிகளில் ஏற்றக்கூடிய கோழி வகைகள் தினந்தோறும் அங்கு இறக்குமதியாகின்றன.

## சைனாவின் உதாரணம்

கீழ்த்திசை நாடுகளில், யுனைடெட்ஸ்டேட்சுக் கடுத்தபடியாகச் சைனாவிலேயே பெருவாரியான வியாபாரம் நடைபெற்று வருகிறது. 1924-ஆம் வருடத்தில் அத் தேசத்திலிருந்து பிரிட்டிஷ் தீவுகளுக்குமட்டில் 25 லக்ஷம் முட்டைகள் ஏற்றுமதி செய்யப்பட்டனவாம். அதைத் தவிர உலர்த்தியும், திரவ ரூபமாகவும 2, 542,000 பவுன்கள் பெறுமான மூள்ள சரக்குகள் ஏற்றுமதியாயின. ஆனால் சைனா பிரிட்டனுக்கு மாத்திரமே முட்டைகளை ஏற்றுமதி செய்வதுடன நின்று விடவில்லை. பிரிட்டனைத்தவிர வேறு பல நாடுகளுக்கும் முட்டைகளையும், பிறவஸ்துக்களையும் அது ஏற்றுமதி செய்கிறது.

இது காலை கோழிவளர்க்குந் தொழிலில் ஈடுபட்டிருக்கும் முக்கியமான நாடுகளின் பெயரையும், அவைகளில் நூற்றுக்கு எவ்வளவு விகிதமுள்ள வியாபாரம் நடைபெற்று வருகிறதென்பதையும் அடியிற் குறிப்பிட்ட அட்டவணையில் காணலாம.

| | தேசங்களின் பெயர். | நூற்றுக்கு எவ்வளவு விகிதமுள்ள கோழி வளர்ப்பு நடைபெற்று வருகிறது. | |
|---|---|---|---|
| 1. | யுனைடெட் ஸ்டேட்ஸ் | 34·2 | % |
| 2. | சைனா | 15·6 | ,, |
| 3. | ருஷ்யா | 6·5 | ,, |
| 4. | ஜர்மெனி | 6·0 | ,, |
| 5. | இத்தாலி | 5·9 | ,, |
| 6. | கானடா | 4·2 | ,, |
| 7. | துருக்கி | 3·3 | ,, |
| 8. | ஜப்பான் | 2·6 | ,, |
| 9. | இங்கிலாந்து, வேல்ஸ்பிரதேச முன்பட | 2·6 | ,, |
| 10. | பிறநாடுகள் | 19·1 | ,, |

(Year Book—United State Department of Agriculture)

இவைகள் 1920 வருஷத்திய கணக்கு விவரங்களே யாகும். அதன் பின் இத்தொழிலில் மிகுந்த துரிதமான அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன.

## இந்தியாவின் கீழ்த்தரமான நிலைமை

சில வருஷங்களுக்கு முன் ஸ்பெயின் தேசத்தில் உலகக் கோழிவளர்ப்பு மகாநாடு கூடிய போது, அதற்கு உலகத்திலுள்ள நாடுகளனைத்தும் தமது பிரதிநிதிகளை யனுப்பியிருக்க, இந்தியா மாத்திரம் அவ்வாறு செய்யவில்லை யென்பது மிகவும் வருந்தத்தக்கதாகும்—ஏனெனில் கோழிகளைப் பராமரிப்பதிலும், அவைகளை வளர்க்குந் திறமையிலும் இந்தியா உலகத்திலுள்ள எந்த நாட்டிற்கும் பின்னடைந்ததல்ல; உண்மையில் மிகப் பழைய காலந் தொட்டு இந் நாட்டிலே கோழிகளை வளர்த்து வந்திருக்கிறார்கள். அந்த வியாபாரம் இங்கிருந்தே மற்ற நாடுகளுக்குப் பரவியதாகக் கூற வேண்டும். அப்படியிருக்க அந்த மகாநாட்டிற்காக இந்தியாவிற்கு உத்தியோக தோரணையில் அழைப்புக் கடிதம் அனுப்பப்பட்டும், இந்திய சர்க்கார் இத் தொழிலின் முன்னேற்றத்தையும், வருங் காலத்தில் அதனாலேற்படக் கூடிய அநுகூலத்தையும் புறக்கணித்து, தமது பிரதிநிதிகளாக ஒருவரையேனும் அனுப்ப முற்படாதது மிகவும் கண்டிக்கத் தக்கதாகும். இந்தியாவில் "கால்லஸ் பாங்கிவா" (Gallus Bankiva) என்னும் வர்க்கத்தைச் சேர்ந்த காட்டுக் கோழியினிடமிருந்து தான் உலகத்திலுள்ள கோழியினங்கள் பெருகி யிருப்பதாக இவ் விஷயத்திலாராய்ச்சி செய்தவர்கள் கூறுகிறார்கள். அன்றியும் சிட்டகாங், பிரம்மபுத்ராப் பிரதேசத்துக் கோழி வர்க்கங்கள் மிகவும் சிலாக்கியமானவைகளாக யிருப்பது பற்றி மேனாட்டார் அந்த வர்க்கத்தையே முக்கியமாகத் தெரிந்தெடுத்து அதன் மூலம் உயர் ஜாதிக் கோழிகளை விருத்தி செய்து வருகிறார்கள்.

இந்தியாவில் ஹிமயமலை முதல் கன்னியாகுமரி வரையில் நெடுகப் பிரயாணம் செய்து பார்க்கும் ஒருவனுக்கு வீடுகளில் வளர்க்கப்படும் கோழிகளைப் போல வேறெந்த பிராணியும் அவ்வளவு அதிகமாக கண்களுக்குப் புலப்படமாட்டா. அவைகளின் எண்ணிக்கை கணக்கிலடங்காது. எனினும் மேனாடுகளிலிருந்து இங்கே விஜயம் செய்யும் பிரயாணிகள், இத் தேசத்திய கோழி வகைகள் மிகவும் சிறுத்து இருப்பதையும், அவைகள் இடும் முட்டைகளும் அவ்வாறே உருவத்தில் சிறியதாக யிருப்பதையும் கண்டு ஆச்சரிய மடைகிறார்கள். நல்ல உயர் ஜாதிக் கோழிகளை விருத்தி செய்வதிலும், அவைகளைத் தகுந்தபடி போஷிப்பதிலும் இந் நாட்டினர் மிகவும் அலட்சியமாக இருந்து வந்திருப்பதே அதற்குக் காரணமாகும். ஆனால் இந்திய தேசத்துக் கோழிகள் இயற்கையாகவே நல்ல திடமுள்ளவை. நோய்களை யெதிர்த்து நிற்கும் சக்தி அவைகளுக்கு மிகுதியும் உண்டு. தவிரவும் எத்தகைய சீதோஷ்ண மாறுபாடுகளாலும் அவைகளுக்குக் கெடுதி யேற்படுவதில்லை. இவைகளில் நல்ல உயர்ந்த ஜாதிக் கோழிகளைத் தெரிந்தெடுத்து அவைகளின் மூலம் இப்பொழுதுள்ள கோழிகளின் இனத்தை யபிவிருத்தி செய்யும் பக்ஷத்தில், இந்தியாவின் பொருளாதார நிலைமை எவ்வளவோ மேன்மை யடைவதற்கிடமுண்டு; சிட்டகாங் இனமும் அவைகளில் ஒன்றாகும்.

## நமது தேசத்தில் இந்தத் தொழில் அபிவிருத்தி யடைவதற்குரிய சாதனங்கள்.

கோழிவளர்க்குந் தொழிலிலுள்ள மகத்தான அநுகூலங்கள் இந்தியாவில் அடியோடு உணரப்படாமலில்லை யென்பது சிறிது ஆறுதலைத் தருகிறது. சாஸ்திரீயமான நவீன முறைகளில் கோழிகளை வளர்ப்பதற்கு சில ஆண்டுகளாக சிறிய அளவில் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. ஐக்கிய மாகாணங்களிலும், பர்மாவிலும் கவர்னர் பதவியை வகித்த ஸர் ஹார்கோர்ட் பட்லர் அவர்களுடைய ஆதரவில் கோழி வளர்த்தலை யோர் குடிசைத் தொழிலாகவும் நவீன அபிவிருத்தி முறைகளை யனுசரித்து வியாபார தோரணையிலும் நடத்திவருவதற்கு முதன் முதலாக ஆரம்பம் செய்யப்பட்டது. அதன் பிறகு 1926-ம் வருடத்தில் கல்கத்தாவில் அகில-இந்தியக் கோழி வளர்ப்பவர்களுடையவும், அதில் சிரத்தை யுடையவர்களுடையவும் முதலாவது மகாநாடொன்று கூடியது. அந்த மகாநாட்டில் கோழி வளர்க்குந் தொழிலைப் பற்றிய பல நுட்பமான விஷயங்களைத் தவிர, இந்திய மகாஜனங்களுக்கு இலாபமளிக்கக்கூடிய வழியில் இத்தொழிலை யபிவிருத்தி செய்வது ஸாத்யமாவென்றும், அதன் பொருட்டு எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் விவாதிக்கப்பட்டு, நடைமுறையில் பயன்தரத்தக்க தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இந்தியா விவசாயத்தையே முக்கியமாக நம்பியிருக்கும் தேசம். கோடிக்கணக்கான மக்களுக்கு அதுவே ஜீவாதாரமான தொழிலாகயிருக்கிறது. எனினும் கேவலம் அஃதொன்றையே நம்பியிருக்கும் வரையில் அவனுடைய வாழ்க்கை முறை யொருபொழுதும் மேன்மையடையப் போவதில்லை. தவிரவும் தற்காலத்தில் உலக மெங்குமுள்ள வியாபாரமந்தத்தையும், தானியப் பொருள்களின் விலைகள் ஒரேயடியாக வீழ்ச்சியடைந்துவிட்டதையும் கவனிக்கையில் அவனுடைய தாரித்திரிய நிலைமையை ஓரளவு மட்டுப்படுத்துவதற்கான உப வருமானங்கள் எதற்கேனும் வகை செய்தாலன்றி, சமீப காலத்தில் அவனுடைய நிலைமை இன்னும் கேவலமானதாகவே ஆகக்கூடும். அத்தகைய உப வருமானத்தை யளிக்கக்கூடிய கைத்தொழில்களில் கறவை மாடுகளைப் போஷிப்பதும், கோழிகளை வளர்த்தலும் முக்கியமானவைகளாம்.

இந்தியாவின் சீதோஷ்ண நிலை கோழிகளை வளர்த்து போஷித்து வருவதற்கு முற்றிலும் ஏற்றதாகயிருக்கிறது. சிறிய கைம்முதலைக் கொண்டு குடியானவன் தனது சொந்தப் பண்ணையிலேயே கோழிகளை வளர்த்துவரக் கூடும். முட்டை வியாபாரத்தினால் அவைகளின் தீனிச் செலவுகளை மட்டுமேயன்றி தனது விவசாயச் செலவுகளையும் ஓரளவு ஈடுசெய்து கொள்ளலாம். தவிரவும் கால் நடைகளைப் போஷிப்பதன் பொருட்டு எடுத்துக்கொள்ள வேண்டியதைப்போல அவ்வளவு நீண்ட காலம் சிரமமும் இதற்குத் தேவையில்லை. கோழிகளின் இனம் சீக்கிரமாக விருத்தியடையக்கூடியதாகயிருப்பதால், போட்ட முதலுக்குத் தகுந்த பிரதிபலன் சீக்கிரத்திலேயே கிடைக்கிறது. தவிரவும் கோழிகளுக்கு நல்ல புஷ்டியை யளிக்கக்கூடிய தீனிவகைகளும், தானியங்களும் இந்நாட்டில் ஏராளமாகவும், மிகவும் மலிவாகவும் கிடைக்கின்றன. அன்றியும் சீதோஷ்ண நிலைமை பெரிதும் அநுகூலமாகயிருப்பதால் கோழிகளுக்காக விடுதிகளை யமைக்கும் விஷயமாக விசேஷ

# விரதம்

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை)

"விரதம்" "விரதம்" என்று கூறி நம்மவர்களிலே பலர் வாய்க்கினிய பலகாரங்களையும், வேறு பல கொழுத்த உணவுகளையும் கொள்கின்றனர். விரத தினங்கள் என்று நமது முன்னோர்கள் சில தினங்களை ஏற்படுத்தியதன் அரிய கருத்துக்களையும், பெரிய நோக்கங்களையும் நம்மவர்கள் அடியோடு மறந்துவிட்டனர். நாள் முழுமையும் உபவாசமாகவோ, சத்வகுண உணவுகளான பால் பழம் முதலியவற்றைச் சிறிது கொண்டோ, தீய சிந்தனைகளின்றித் தெய்வ சிந்தனையிலேயே சில தினங்களைக் கழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் நமது முன்னோர்கள் சில தினங்களை விரத நாட்களென்று ஏற்படுத்தினர். மேலும் யந்திரங்களைச் சுத்தஞ் செய்யும்பொருட்டு ஒரு நாள் முழுமையும் அவற்றை வேலை செய்யாமலோ அற்ப வேலையுடன் நிறுத்துவதோ போல நமது சரீரமாகிய யந்திரத்திற்கும் மாதத்தில் ஒரு நாளோ, சில நாளோ 'ரஜா' கொடுக்கவேண்டியது அவசியமாயிருக்கிறது. அதற்காக அந்த நாட்களில் முழுமையும் உபவாசமாகவோ, அற்ப உணவுடனோ இருக்கவேண்டியது அவசியமாகும். ஆயினும் இந்த உண்மைகளையெல்லாம் மறந்துவிட்டு நம்மவர்களிலே பலர் விரத தினங்களில் விசேஷமான கொழுத்த உணவுகளைக்கொண்டு ராஜச, தாமச குணங்களை

---

மான செலவொன்றும் செய்யவேண்டியதில்லை. கோடையில் மிகக் கடுமையான வெய்யிலின் உக்கிரத்தினின்றும், பலத்த மழையினின்றும், குளிர் காற்றினின்றும், காட்டுமிருகங்களினின்றும் அவைகளுக்குக் கெடுதியும், சேதமும் ஏற்படவொட்டாமல், பாதுகாப்பளித்தால் போதுமானது. ஆயினும் அதன்பொருட்டு ஏராளமான பொருட் செலவில் விடுதிகளை யமைக்கவேண்டிய அவசியமில்லை. இப்படிப்பட்ட அநுகூலமான நிலைமைகளும், அதற்கேற்ற வசதிகளும் இருந்தும் இந்திய மக்கள் இந்த மகத்தான தொழிலின் அருமை பெருமைகளை யுணராது வாளாயிருந்து வருகின்றனர். கலாசாலைகளிலேயே தமது காலத்தை யெல்லாம் கழித்து, வேலையில்லாமல் திண்டாடும் யுவர்கள் மிகவும் சுலபமான இக் கைத்தொழிலில் ஈடுபட்டுத் தமது ஊக்கத்தையும், புத்தியையும் செலவிடுவார்களானால், முன்னேற்றமடைந்திருக்கும் நாடுகளின் உதாரணத்தைப் பின்பற்றி நவீன அபிவிருத்தி முறைகளைக் கையாண்டு, ஒழுங்காக இத்தொழிலை நடத்துவதற்கு முன்வரும் பக்ஷத்தில், நமது தேசத்தின் பொருளாதார நிலை யெவ்வளவோ முற்போக்கடைவதுடன், அவர்களுடைய சொந்த நலன்களும் பூர்த்தி யடைவதற்குப் பெரிதும் இடமுண்டு.

விர்த்திசெய்கின்றனர். விரத நாட்களிலே பொழுது போக்குவதற்காகப் பல வித விளையாடல்களைச் செய்வார் பலர். தூங்குவோர் பலர்.

இனி விரத நாட்களிலே சிலர் முழுமையும் உபவாசமாயிருக்கின்றனர். அதனால் கேடும் நேர்கின்றது. விரதத்தைக் கட்டாயமான நிர்ப்பந்தமாகக் கருதிப் பாலரும், பலவீனரும் வயோதிகரும் நோயாளிகளுமாயுள்ள பலர் பட்டினியே கிடக்கின்றனர் அதனால் அவர்களுக்கு நேரும் கேடுகள் வெளிப்படை. பலர் ஊராருக்கும், உற்றாருக்கும் அஞ்சி விரதமிருந்து நாளை எப்பொழுது விடியும் அன்னத்தைக் காண்போம் என்ற சிந்தையுடன் இருக்கின்றனர்.

நமது முன்னோர்கள் மூதறிவுடன் ஏற்படுத்தி வைத்த முறைகளின் உண்மையான கருத்தை அறியாமையால் போலியாக நடைபெறும் விஷயங்கள் அளவிறந்தன. விரத காலங்களில் உபவாசம் அநுஷ்டிப்பது பற்றி ஸ்ரீ ராம தீர்த்த ஸ்வாமிகள் என்னும் மகான் கூறும் பின் வரும் வாக்கியங்களை நம்மவர்கள் கவனிக்கவேண்டும்:—

தீய விஷயங்களில் செல்லாமல் மனத்தை அடக்குவதற்கு உபவாசம் அவசியமானது. ஆனால் அதற்காக (பசிக்கும் பொழுது) பட்டினி கிடக்க வேண்டாம். மிகுதியாகச் சாப்பிடவும்வேண்டாம். இரண்டும் கேட்டை விளைவிக்கும். சில சமயங்களில் உபவாசம் நமக்கு இயற்கையாகவே நிகழ்கின்றது. சாப்பாடு வேண்டாமென்று சிலசமயங்களில் நமக்கு உணர்ச்சியேறபடுகின்றது. அப்பொழுது அந்த உணர்ச்சிக்குக் கீழ்ப்படியவேண்டும. மற்ற வேளைகளில் சாப்பிட வேண்டுமென்று நோக்கமே மிகுந்திருக்கிறது. அப்பொழுது சாப்பிட வேண்டியதுதான்.

உபவாசம் நமது மேனேக்கத்திற்கு ஒரு அநுகூலமாயிருக்க வேண்டும். ஆனால் அதனை நாம் ஒரு நிர்பபந்தமாகச் செய்து கொள்ளலாகாது. நமது ஜனங்கள் அதனை நிர்ப்பந்தமாகக் கருதிப் பட்டினியே கிடக்கின்றனர். அப்பொழுது அவர்கள் உபவாசம் என்ற வழக்கத்திற்கு அடிமையாய் விடுகின்றனர். எந்த வழக்கத்திற்கும் நாம் அடிமையாய் விடலாகாது. நமக்கு விரத தினங்கள் என்று சில தினங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அப்பொழுது எவ்வகையான ஆகாரம் உட்கொள்ள வேண்டுமென்பது பற்றியும விதியேற்பட்டிருக்கிறது. அமாவாசை, பௌர்ணிமை இரண்டும முக்கியமான விரத தினங்களாகும். இந்த தினங்களில் கனத்த உணவுகளின்றி எளிய உணவுகளை உட்கொள்ள வேண்டும். இந்தத் தினங்கள் மனததை ஏகாக்ரப்படுத்துவதற்கு அநுகூலமானவை. இதனை அநுபோகத்தில் அறியலாம்.

சுய நயமுள்ள சிந்தனைகள், வீணாசைகள் மற்றக் கெட்ட சிந்தனைகள் இவற்றை வளர்க்காமல் அவற்றை அழித்து அவை ஒரு சிறிதும இன்றி ஒழிந்திருப்பதே உண்மையான விரதமாகும்.

---

# ஐய நீக்கம்

(பூ. ஸ்ரீநிவாசன்)

(குறிப்பு:—"ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்" என்னும் சஞ்சிகை "சந்தேகந் தெளிதல்' என்னும் தலைப்பின் கீழ் நண்பர்கள் கேட்கும் சந்தேகக் கேள்விகளுக்கு விடையிறுத்து வருவதுபோல், "ஆனந்தபோதினி'யும் செய்து வருவது நலம் என்று சில நண்பர்கள் அடிக்கடி கேட்டு வருகின்றனர். இப்போது எம்மால் தொடர்ச்சியாக எழுதப்பட்டுவரும் "பிரம சூத்திரம்" முடிவு பெறும்வரையில் அவ்வாறு செய்வது முழுதும் சாத்தியமில்லையாயினும், அவகாசம் கிடைத்த போதெல்லாம் இயன்ற வரையில் எழுத நிச்சயித்துள்ளோம். ஆகலின் முதலில், ஓர் கிறிஸ்தவ நண்பரால் விடுக்கப்பட்ட ஐயவினாவிற்கு விடைதர முயல்வாம்.)

"எங்கள் சுவாமி மனித வாழ்க்கையின் ஒழுகலாற்றினைச் செவ்வைப்படச் சொல்லியும் சொல்லியவாறு ஒழுகியும் காட்டியதுபோல, உங்கள் சுவாமிகளெனச் சொல்லப்படும் இராமனும் கிருஷ்ணனும் ஒழுகிக் காட்டியிருக்கிறார்களென்று சொல்ல முடியாதல்லவா?" சி. வி.

எங்கள் சுவாமி என நண்பர் ஏசுநாதரையே சுட்டுகின்றாரெனக் கருதுகின்றோம். "ஏசுவானவர் மலைச் சொற்பொழிவு முதலியவற்றின் வாயிலாகப் பல மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாப் போதனைகளைச் செய்தார். 'ஒரு கன்னத்தில் அறைந்தவனுக்கு மறு கன்னத்தைக் காட்டு, மேலாடையைப் பறிப்பவனுக்கு உன் மேலங்கியையும் கொடுத்துவிடு' என்பன போன்ற போதனைகளுக்கிணங்கத் தம்மைச் சிலுவையிலறைந்து கொல்ல முயன்ற காலத்தும், அவர்களை எதிர்த்துப் போரிடாமல், தம்மாவியையும் கொடுத்தார். இராமனும் கிருஷ்ணனும் இவ்வாறின்றிப் பலரைக் கொன்றிருக்கின்றார்கள். அன்றியும் அவர்கள் மாந்தர்க்கு நற்போதனைகளும் செய்யவில்லை." என்பன போன்ற கருத்துக்களை உள்ளத்திற்கொண்டே நண்பர் இவ்வினாவை விடுத்திருக்கிறார் எனக் கருதுகின்றோம்.

கடவுள் எனப்படும் பொருளின் உண்மையில் நம்பிக்கை யுடையோரனைவரும் உலக முதற்பொருளாகிய அப்பரவஸ்து ஒன்றேயென்பதை உடன்படாமல் தீராது. எனவே கடவுள் ஒருவரேயன்றிப் பலரல்லர் என்றே ஒத்துக் கொள்ளுவரென்பதில் சந்தேகமில்லை. ஒரு ராஜ்யத்திற்கு ஓரிறைவனிருத்தலியையுமேயன்றி பலவரசர்களிருத்த லியையாது. அவ்வாறிருப்பினும் அவரைப் பல பெயர்களாலும் பல வடிவங்களாலும் நாம் அழைத்து வழிபட்டு வருகின்றோம். எனினும் உலகச் சமயங்கள் வெவ்வேறு பெயர்களால் அழைத்து வருதல்போல், வெவ்வேறு பெயர்களையுடைய கடவுளர் வெவ்வேறாகப் பலரிலர். ஜலம், நீர், பானி, வாட்டர் என்னும் எல்லாப் பெயர்களும் தண்ணீராகிய ஒரு வஸ்துவையே குறிப்பதுபோல, நாராயணன்,

சிவன், அல்லா, எகோவா என்னும் பெயர்களெல்லாம் ஒரு வஸ்துவையே குறிக்கும் பல பெயர்களாம் என்பதே மூதறிவாளர் துணிபு. அப் பரம் பொருள் "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" சர்வ வியாபியாய், பேரறிவு பேராற்றல்களுடையதாய், சத்தாய், சித்தாய், ஆனந்தமாய், இன்னோரன்ன பிற மனிதர்களால் கணிக்கவியலாத இலக்கணங்களுடையதாய் ஒளிர்வதாமென்பதும் கடவுளாராய்ச்சியாளர் கொள்கை.

அப்பொருள் உருவுடையதென்றும் அருவானதென்றும் இரண்டுமுடையதென்றும் பலரும் பலவிதமாகக் கூறினும் பெரும்பாலோர், அப் பர வஸ்து அவசியம் நேர்ந்தபோது உருத்தாங்கி மாநிலத்துத் தோன்றுவதுமுண்டென்பதை அங்கீகரிக்கின்றனர். "தருமம் தாழ்ந்து அதருமம் அதிகரிக்கும் போதெல்லாம் நான் அவதரிக்கிறேன்" எனக் கண்ணன் கழறியதாகக் கீதை கூறுகின்றது. இங்கு அவசியமாவ தியாதெனின்: மாந்தர் சென்னெறி யறியாது நன்னெறி விட்டுப் புன்னெறி போகத் தொடங்குங்கால் அவர்களுக் கறத்தாறு காட்டலேயாகும்.

மாந்தர்களின் நடையுடை பாவனைகளனைத்தும் மனோ நிலையும் எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரே தன்மையா யிருத்தலில்லை. காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்பப் பலவகைப் பட்டிருக்கும். அன்றியும் ஒரே காலத்தில் ஒரே தேசத்திலுங்கூட ஒரேவிதமாக விரா. கொடியோரையும் பகைவரையும் அடக்கியும் அழித்தும் பிரஜைகளைக் காக்கும் கருமத்தை மேற்கொண்ட காவலனுக்குரிய அறமும், நகைமுகமும் நல்லுரையும் உடையவனாய் யாவரையும் தன் வயப்படுத்திச் செல்வஞ் சேர்க்கும் தொழிலை மேற்கொண்ட வாணிபனுக்குரிய தருமமும் ஒன்றாக விருத்தலியலாதன்றே. ஆகவே, அறமானது கால தேச கர்ம வேறுபாடுகளுக் கேற்ப வேறு பாடுடையதாகும். அன்றியும்,

தர்மமானது சாமானிய தருமம் என்றும் விசேஷ தருமம் என்றும் இருவகைப் பட்டிருக்கும். இவை ஒன்றற்கொன்று முரண்பாடுடையனவாக வாராய்ச்சியிற் றோன்றும். உதாரணமாக மூத்த சகோதரனைத் தந்தையாகப் பாவித்து அவன் சொற்படி நடந்து உற்றுழியுதவுதல் தருமம். ஆனால் விபீஷணன் இத்தருமத்திற்கு முரணாக வொழுகினான். அவனது செய்கையை யான்றோர் புகழ்ந்தே கூறுகின்றனர். இஃதெப்படிப் பொருந்தும். இவற்றுள் முன்னையது சாமானிய தருமம். தீச்செயலுக்குத் துணை செய்யலாகா தென்றெண்ணிச் செய்த காரியமாகலின் பின்னையது விசேஷதருமம். இவ்வாறே தருமத்தின் (அறத்தின்) துணிவு அதன்வழிச் செல்வோரானும் அறிதற்கரியதாகும். இவ்வாராய்ச்சி நாம் எடுத்துக்கொண்ட விஷயத்திற்குச் சம்பந்த மில்லாத தாகத் தோன்றினும் அறத்தைக் கூற வந்தவிடத்து அதனியல்பும் கூற நேர்ந்ததெனக் கொள்க. இனி விஷயத்திற்குச் செல்வோம்.

இந்துமதம் புராணேதிகாச மதமன்று. எனவே, புராணங்களையும் இராமாயணம் பாரதம் போன்ற இதிகாசங்களையுமே ஆதாரமாகக் கொண்டுள்ள மதமன்று. மக்களுக் கத்தியாவசியமான சகல விஷயங்களும் இராமனும் கிருஷ்ணனும் தோன்றுதற்கு வெகு காலத்திற்கு முன்னரே கூறப் பட்டுவிட்டன. ஆகவே, புதிதாக யாரும் ஒன்றும் கூறவேண்டிய அவசியமவ்வளவாக ஏற்பட்டிலது. பழைய போதனைகளைத் தவறாக மாந்தர்

பொருள் கொண் டொழுகுவாராயின் திருத்தஞ் செய்யலாம். அத்தகைய திருத்தம் கிருஷ்ணாவதார காலத்திற் சிறிது நேர்ந்தது. ஆகவே, பகவான் கீதையை உபதேசிக்க வேண்டியதாயிற்று. உபநிடதம் பிரம சூத்திரம் என்னு மிவற்றோடு சேர்ந்து பிரஸ்தானத்திரயம் என் றழைக்கத்தக்க சிறப் பினை யுடையது அப்பகவான் உபதேசித்த கீதை. இராமாவதார காலத்தில் அத்தகைய உபதேசத்திற்கு அவசிய மின்மையின் அவர் யாதொன்றுங் கூறா தொழிந்தனரென்க. அன்றியும் பாரதநாடு பண்டைக் ககலந்தொட்டு ஒழுக் கத்திற் றலை சிறந்து விளங்கும் நாடு என்பது மறுக்கமுடியாத உண்மை. இது பற்றியே இது புண்ணியநாடு எனவும் விதந் தோதப்பட்டு வருகின்றது. சிற்சில காலங்களில் அறத்தைப் புறக்கணிக்கும் புல்லுருவிகள் தோன்றின வாயினும் அவை அப்போதைக் கப்போது களைந் தெறியப்பட்டு அறநெறி செவ்வைப் படுத்தப்பட்டு வந்தன. அப்புல்லுருவிகளைக் கல்லியெறிய வேண்டி யதற்காகவே கடவுள் அக்கால் அவதரிக்க வேண்டியவரானார். அவ்வவதார காரணங்கள் பாகவத பாரத ராமாயணங்களில் நன்கு கூறப்பட்டுள்ளன.

இராமன் கிருஷ்ணன் இவர்களின் வாழ்க்கை மக்கள் வாழ்க்கைக்குத் தக்க வழிகாட்டும் கலங்கரை விளக்கம் போன்றிருந்ததே யன்றித் தவறான நெறியிற் செலுத்துவதா யிருக்கவில்லை. இராமன் "நியாய மத்தனைக்குமோர் நிலயமா" யிருந்தானென்ப துண்மையே யாயினும் கிருஷ்ணன் அவ்வா றிருந்திலனே என சிலர் ஐயுறவு கொள்ளலாம். ஆயர் வீடுகடோறுஞ் சென்று வெண்ணெய் திருடியது ஆயர்குல மாதர்களுடன் கூடிப் பல லீலை கள் புரிந்தது என்பவையோ அவ்வாறு அவர்கள் எண்ணுதற்குரிய கார ணங்களா யிருக்கலாம். பலரது விளையாட்டி னியல்புகளை வர்ணிக்கப் புகுந்த புலவர்களின் செயல்களைக் குறித்தும் அவ்வாறு எழுதுமாறு அவர் களைத் தூண்டிய இலக்கண முறையைக் குறித்துமே நாம் குறை கூறவேண்டு மன்றி கிருஷ்ணனது ஒழுக்கத்தைக் குறை கூறுவது முறைமையாகாது. நகை இன்பம் முதலிய சுவைகளையும், உயர்வு நவிற்சி மிகையுயர்வு நவிற்சி முதலிய அணிகளையும் தாம் கூறப்புகும் சரிதையில் நிரப்புவதையே பெரு நோக்கமாகக் கொள்ளவேண்டிய நிலையிலிருக்கும் கவிகள் கிருஷ்ணனது பிள்ளைமையை—பால லீலையை—சாமானியமான சிறுவர் எவ்வாறு செய் வார்களோ அந்தவகையில் வருணித்திருப்பது ஆச்சரியமல்ல. குப்பைகளைத் தள்ளி விலையேறப்பெற்ற மணியை யெடுத்தல்போல் கற்பனைக் களஞ்சியங் களாகிய கவிகளின் கற்பனைகளைத் தள்ளி உண்மையை யுணர்தலே உகந்த செயலாம். இதற்கு இரண்டோ ருதாரணங்கள் தருவோம்.

கிருஷ்ணன் சிறுவனாயிருந்த போதுதான் கோபிகைகளுடன் விளை யாடினதாகச் சொல்லப்பட்டிருக்கக் காண்கின்றோம். அப் பாலப்பருவம் காம வெழுச்சிக்கும் நுகர்ச்சிக்கும் ஏற்றதா மென்பதைச் சிறிது ஆராய்வது அறிவுடையார் கடமையாம். மற்றொன்று: இராமாயணத்தில இராமன் மிதி லைக்குப் போகையில் சீதையைக் கண்டு காமுற்றதாகக் கம்ப ராமாயணம் கழறுகின்றது. முதனூலில் இல்லாத இதனைக் கம்பர் காவியச் சிறப்பினிமித் தம் புதுவதாகப் புனைந்துரைத்தார். ஆகலின் இவற்றை—இச்சிறு விஷயங் களை—கவிகளின் கற்பனைகளை—ஆதாரமாகக் கொள்ளலாகாது. அன்றியும் நாயக நாயகீ பாவமாகக் கதைகளியற்றுதல் மரபு. அம்முறையில் கண்ணனை

நாயகனாகவும் அடியார்களை நாயகியாகவும் உருவகப்படுத்தி உள் பொருளமைத்துப் பாடிச் சென்றனர் பாவலர். இராமாயணம் முதலியவற்றிற்கு இரகசியார்த்தம் வேறிருத்தலும் காண்க. கிருஷ்ணன் பாண்டவர் அசுவமேதஞ் செய்த காலத்தில் "யான் பிரமசாரி" எனக்கூறி யுறுதிப்படுத்தி காட்டியிருத்தலும் காண்க. நிற்க,

இயேசுநாதர் "ஒரு கன்னத்திலடித்தால் மறு கன்னமும் காட்டு" எனக் கூறியது சந்தர்ப்பம் வேறு. அந்த முறையை யாவரும் கைக்கொள்ளின் உலகில் துஷ்டர்களின் கூட்டம் பெருகிச் சாதுக்கள் வருந்த நேரிடும். இந்த உபதேசம் எல்லாக் காலத்திலும் கைகொள்ளத் தகுந்த அனுபவசாத்தியமான ஒழுக்கமுமாகாது. அன்றியும், ஏசு தோன்றிய தேசமாந்தரின் மனோ நிலைக்கு அவ்வுபதேசம் அச்சமயத்திற்கு ஏற்றதா யிருந்திருக்கலாம். இராமன் மனைவியை இராவணன் அபகரித்துச் சென்றான். இப்போது இராமன் கடமையென்ன? ஏசுவின் உபதேசம் ஈண்டுப் பயன்படுமாறெங்ஙன்? மாந்தர் தத்தம் மனோ நிலைமைக்கேற்ப மேற்கொண்டுள்ள கருமங்களைச் செவ்வனே நடத்த அததற்குரிய தர்மங்களைக் கைக்கொள்ளுதல் இன்றியமையாச் செயலாகும். க்ஷாத்திர தர்மத்தைப் பெற்றிருக்க வேண்டிய க்ஷத்திரியன் கோழைத் தன்மையை அல்லது சாதுக்களின் தர்மத்தைப் பெற்றிருத்தல் பெருமை தருஞ் செயலாமோ? உலகியல் நன்கு நடக்க சகல தருமங்களும் வேண்டும். அவற்றைச் செய்யுங்கால் நான் செய்கிறேன் என்னும் அகம்பாவத்தோடு செய்யாமல் நிஷ்காமியமாகத் தனைக் கடவுளின் கருவியாகக் கருதிச் செய்ய வேண்டும் என்று கிருஷ்ணன் கீதையின் வாயிலாக உபதேசித்துள்ளார். இதுபற்றியே "எனக்கு அரசுவேண்டாம்; கொலைத் தொழிலுக்கிசையேன்" எனக் கூறிய தருமனுக்கும் அருச்சுனனுக்கும் க்ஷத்திரிய தர்மத்தைக் கூறிப் போர் செய்யுமாறு தூண்டுகிறார். ஆகவே, அவர் குற்றமற்ற வாழ்க்கையை நடத்தியதோடு உலகியலையும் நன்கு நிலை நாட்டினாரென்பது வெள்ளிடைமலையாம்.

மூர்க்கனுக்குச் சாந்தமும் சாதுத்தன்மையெனக் கருதிக் கோழைமையைக் கொண்டோர்க்கு வீரமும் உண்டாக்கி உலகியலைச் சமநிலையிலுய்த்து நடாத்தக் கருதிய கடவுள் ஏசுவாகத் தோன்றி, அத்தேயத்தினர்க் கேற்பவும், கிருஷ்ணனாகத் தோன்றி இத் தேயத்தினர்க் கேற்பவும், உபதேசித்தும் ஒழுகியும் சென்றார் என்று கொள்ளுதலே சாலச் சிறப்புடைத்தாம்.



# இசைத் தாயின் காட்சி



(ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

செல்வம் பல மலிந்த சென்னைப் பதியினிலே,
மெல்லிய பூங்காற்று வீசும் 'மெரினா'வில்,
அரவமடங்கி அனைவரும் சென்ற பின்பு
இரவு பத்து மணி இருக்கும் பொழுதினிலே,
தன்னந் தனியே தரையில் அமர்ந்திருந்தேன்.
என்னெஞ்சம் எங்கெங்கோ ஏகித் திரிந்தபின்னர்,
நீல நெடுவானில் நிலவும் விண்மீன்களிடை
பாலனைய தண்ணொளி பரப்பிச் சிரித்திருந்த
மோகன சந்திரனின் முத்துச் சுடரொளியில்
மோகம் மிக்க கொண்டு மோன அமைதியிலே,
ஆனந்த மெய்தி அடங்கி யிருந்ததுவே.
தேனருந்திச் சோலையில் திரிகின்ற வண்டுகளும்
கருமுகிலைக் கண்டு களித்தாடும் மயிலினமும்
கருத்தைக் கவர்ந்(து) உருக்கக் கற்ற குயிலினமும்
சென்னைக் கடற்கரையில் சேர்வதிலை யாதலினால்,
தன்னந் தனியே சற்றுஞ் சலியாமல்
நின்(று) இசைத் தேவியை நித்தம் பலவழியில்
வன்றுயர மூட்டி வருகின்ற 'ரேடியோ'வைக்
கண்டு பெரிதும் கலங்கிய என்நெஞ்சம்
கொண்ட கவலை குறித்து நினைத்தபடி
தன்னை மறந்ததொரு தன்மையை எய்தியதே.
நீலக் கருங்குயில்கள் நெஞ்சுருகப் பாடிநிற்ப—
கோலச்சிறை மயில்கள் குளிர்ந்து களித்தாட—
புள்ளிகள் கொண்ட பொன்வண்ண மான்களவை
துள்ளி விளையாட—சுரும்புகள் பண்பாட—
மல்லிகை முல்லை மலர்கள் பலவும்தம்
மெல்லிதழ்கள் தம்மை விரித்துச் சிரித்திருப்ப—
மாங்கனிகளைப் பறித்து மந்திகள் பந்தாட—
பூங்கொடிகள் எங்கும் புத்தழகு பெற்றசைய—
சிந்தை தனை மயக்கிச் செப்பரிய பேரின்பம்

தந்திடும் பல் காட்சிகள் சார்ந்ததொரு சோலையிலே,
செவ்வல்லிப் பூக்களோடு செந்தாமரை மலர்கள்
கவ்வித் தழுவிக் களித்தசைந்து முத்தமிட்டுக்
குலவியிருந்ததொரு குளிர்ந்த குளக்கரையில்,
நிலவு மதி முகமும் நீலக் கயல் விழியும்
வில்லொத்த வாணுதலும் மேகக் கருங் குழலும்



முல்லை யரும்பன்ன முத்தொளிப் பற்களையும்
பெற்ற ஒரு மங்கை பெருந்துன்ப முற்றவள் போல்
புற்றரையின்மேலே பொலிவிழந்து வீற்றிருந்தாள்.
கூந்தல் விரிந்தலையக் குளிர் விழிகள் நீர் சொரியச்
சோர்ந்திருந்த அவளின் சோகத்தைக் கேட்டறிய
உன்னிய நான் அருகில் உற்றுநின்றேன்; அவ்வேளை,
என்னை அவள் நிமிர்ந்து ஏறிட்டுப் பார்த்தபடி
'எங்கு நீ வந்தாய்?' என்(று) என்னைக் கேட்டவுடன்,
'மங்கையே! உன்றன் மனத் துயரம் யாது?' என்றேன்.
"சிந்தை மிக நைந்து சிந்திக்கும் வேளையிலே,
வந்த நீ என்றன் மனப் புண் கிளறிவிட்டாய்!
என் துயரம் கேட்டு நீ என்ன செயவல்லாய்?"
என்றனள்; யானும் "ஈசன் அடி ஆணை!
செந்தமிழ்த் தாயின் திருவடிகள் மேலாணை!

4

இந்திய மாதாவின் திருவடிகள் மேலாணை!
என்றனிடம் சொன்னால் எப்பாடு பட்டேனும்,
உன்றன் மனத் துயரம் ஒழிக்க முயன்றிடுவேன்"
என்று புகன்றேன்; இரு கண்களும் மலர
என்றன்னை நோக்கி இயம்பத் தொடங்கினளே:
"அன்பனே! இந்த அருமைத் தமிழ் நாட்டில்
முன்பு நான் பெற்றிருந்த மொழிவரிய மாண்பெல்லாம்,
பொய்யாய்க் கனவாய்ப் புகல் கதையாய்ப் போயிற்றே!
மெய்யன்பு மிக்க வீரத் திரு மன்னர்,
'இசையன்னை'யாம் என் இனிய பெருங்கீர்த்தி
திசையெங்கணும் பரவச் சிறப்பாய் வளர்த்திருந்தார்.
நல்லியல் முத்தமிழில் நடுவிடம் கொண்டிருந்தேன்.
தொல்லிக் கௌவாணம்—குறிஞ்சி—புறநீர்மை—
செந்துருத்தி—நாட்டம்—சீகாமரம்—தக்கம்—
இந்தளம்—தக்கேசி—இனிய பழம் பஞ்சரம்—
பியந்தைக் காந்தாரம்—பெருமை மிகும் பஞ்சமம்—
வியந்தமொடு கைசிகம் விளம்பும் பல பண்கள்
பெருமையொடு முன்னம் பெற்றிருந்தேன்; இன்றவைதாம்
திருவாய் மொழியிலும் தேவார நூலிலுமே
உறங்குவதை எண்ணில், உள்ளம் கொதிக்குதடா!
சிறந்த தமிழ்ப் பண்கள் செத்தொழிந்து போச்சுதடா!
வட நாட்டினின்றும் வந்த ஒரு சக்களத்தி,
குடியேறி இங்கு கொண்டாள் பல சிறப்பும்!
பொருளுணர்ச்சியின்றி—புதுச்சொல் பல புகுத்தி—
அரும் பதங்கள் தின்றும்—அக நெகிழ்ச்சி கொள்ளாதும்—
சேட்டைகள் பற்பலவும் செய்து(ம்) எனை இந்நாளில்
வாட்டு(ம்) இசைக் கொலைஞர் மறைந்தொழிவ(து) எக்காலம்?
யாழும் குழலும் இருந்தும், அவை விலக்கிப்
பாழும் ஆர்மோனியத்திற் பாடிடக் கேட்டவர்கள்,
உடன் செவியைப் பொத்தி ஓடிவிடச் செய்துவரும்
மட மங்கையர் இங்கு மனம் திருந்தல் எக்காலம்?
சத்த சுரங்களெனும் 'ச-ரி-க-ம-ப-த-நி'களைச்
சித்திர வதை புரிவோர் சீர்திருந்தல் எக்காலம்?
நிலையற்ற செல்வத்தில் நெஞ்சைச் செலுத்தி, கலைக்
கொலைகள் புரிந்துவரும் கொடியோர் மடியாரோ?
பேசும் படங்களிலே, பிழைகள் பல மலிந்த
நீசப் புன் பாட்டுகளை நிரப்பிக் கலையுணர்ச்சி
கொஞ்சமுமில்லாரைக் கொண்டு கதறவைத்(து) என்
நெஞ்சைப் பிளந்துவரும் நீசர் தொலையாரோ?
உள்ளத்திற் பொங்கியெழும் உணர்ச்சிப் பெருக்கின்றி,
கள்ள நடிப்பதனைக் கண்டோர் சிரித்திடவே
வெளிப்படுத்திவரும் வீணர் மறையாரோ?
களிப்பைப் பெருக்கிக் கவலை மறந்திடவே
காசு கொடுத்(து) இசைக் கச்சேரி கேட்கவரும்

நேசத் தமிழர்கள் நிறைந்த சபையினிலே,
பொருளுணர்ச்சியின்றிப் புரியா அயல் மொழியில்
மருள் பெருகப் பாட்டை மனம் போனவாறெல்லாம்
பாடி பல சேட்டை பண்ணிவரும் பாடகர்கள்,
வாடித் தவிக்குமென்றன் மனத்துயரை எண்ணுரோ?
இன்றமிழ்ப் பண்கள் எத்தனையோ இங்கிருக்க,
என்றுமவற்றில் எண்ணம் செலுத்தாமல்
அயல் நாட்டுப் பண்களில் ஆர்வம் மிகுந்துவரும்
கயவர்கள் என்னைக் கவனிப்ப தில்லையடா!
இதயத்தி(ற்) பாய்ந்து இன்னதென வொண்ணுத
அதிசயப் பேரின்ப மதனை மிகப் பெருக்கி
மற்றவற்றை யெல்லாம் மறப்பித்துத் தன்வசமே
உற்றுவிடச்செய்யும் உத்தம நற் சங்கீதம்,
சுருங்கிச் சுருங்கிச் சுருங்கிக் குறைந்ததடா!
இரு செவிகளுக்கும் இன்னுதை வெற்றோசை
ஈயுங் கருவிகள் எங்கும் மலிந்ததடா!
ஆயுங் கலைஞர்கள், அரிய குழல்—வீணைப்
பற்று மிகுந்து பாடல்களைப் பண்ணிவிட்டுக்
கற்றவையெலாம பழங் கதையாகப் போச்சுதடா!
புல்லை யுருக்கிப் பூக்கள் உதிர்வித்துக்
கல்லை யுருக்கிக கட்டை மரங்களெலாம்
தளிர்த்துத் தழைத்துத் தாம் செழித்து நின்று மிகக்
குளிர்ச்சி தரச்செய்து, கொடு நஞ்சப் பாம்புகளும்
தநதோகையை விரித்துத் 'தம்' 'தோம்' என்றாடுகிற
விந்தை மயில்களும் வெள்ளிச் சிறு புள்ளி
மேய இளமான்களும் விடைகள் பசுக் குலமும்
தூய குழல் இன்னிசையில் சொக்கிநிற்கச் செய்ததெலாம்
பாட்டிற் கிடந்துறங்கும் பழங் கதையாய்ப் போச்சுதடா!
நாட்டில், அதை இன்று நாவலர் தாம் கட்டிவிட்ட
கற்பனையாமென்று கண்டபடி பேசிவரும்
அற்பர்களை எண்ணில், ஆவி கொதிக்குதடா!
உள்ளக் கனிவின்றி உணர்ச்சிப் பெருக்கின்றி,
தெள்ளத் தெளிவாகச் செப்பும் திறமின்றி,
இதயமதில்லாத இயந்திரம்போல் பாடிவரும்
பதர்களை இன்றெண்ணில் பதைக்குதென் நெஞ்சமடா!
பொருளுணர்ந்து நெஞ்சம் பொருந்திக் கலந்தின்பம்
பெருகத் தமக்குள் தாம் பெரிதும் அனுபவித்து
உரைகள் தெளிவாக உணர்ச்சி ததும்பிடவே
விரைகின்ற ஆத்திரம் விலக்கி இசை பாடிடுவோர்,
இன்றைத் தமிழ்நாட்டில் எத்தனை பேர் வாழ்கின்றார்?
இன்றமிழ்ப் பாக்களின் இனிமை மிகுந்திடவே—
பாட்டின பொருளழகு பண்ணிற் கலந்திடவே—
கேட்பவர்தம் நெஞ்சுருக்கும் கீதங்களைத் தம்மில்
தாமே அனுபவித்துச்சபையிலே பாடிடுவோர்,

தாமே பெருகி இங்கு தமிழர்களைச் சீர்திருத்தி
என் துயரமோட்டி இன்பூட்டல் எக்காலோ?
இன்றைத் தமிழ் நாட்டில் எத்தனையோ சங்கீத
சவைகளிருந்தும், தாய் என் துயர் களைய
அவை செய்த தொண்டென்ன? அன்ப! நீ சொல்வாயோ?
முத்தமிழ் மங்கைகளில் முன்னம் நடுவிருந்தேன்;
பத்தர்கள்—நற் கவிஞர்—பாலர்கள்—காதலர்கள்—
போர்வீரர்—நாட்டில் புகழ் மிக்க மன்னவர்கள்—
கூர்மதியும் நகைச்சுவையும் கொண்ட விகடர்கள்—
அனைவரையும் முன்னர் ஆனந்த நற் கடலில்
தினமும் விளையாடச் செய்வித்து நான் இருந்தேன்!
யாழும் குழலும் இனிதொலித்த வீடுகளில்,
பாழும் ஆர்மோனியப் பாத்தை புகுந்துவிட்டாள்!
'கீதங்கள்' பாடும் கிராமபோன் பெட்டிகளின்
வேதனையைப் பெருக்கும் வெங்குரலை என்னென்பேன்?
அன்னிய நாட்டுப் பண்களவற்றில் பெருமோகம்
மன்னியவர் என் மனத்தை வதைக்கும் கொடுமையினை,
எவ்வாறு சொல்வேன்? என் மனத்தின் வெந்துயரை
இவ்வா(று) இங்கு எத்தனைநாள் இன்னும் சகித்திடுவேன்?
என் குறைகளெல்லாம் எடுத்துனக்குச் சொல்லிவிட்டேன்;
நன்கிவற்றைச் சிந்தித்து நாட்டில் பரப்புவையோ?
இந்த தமிழ்நாட்டில் யான் முன்பு பெற்றிருந்த
விந்தைப் புகழ் எனக்கு மீண்டும் கிடைத்திடுமோ?
என்பக்கல் அன்புடையோர் என்று சொலிக்கொள்பவர், என்
துன்பங்களை விரைவில் தொலைக்க முயல்வாரோ?
என் துயர்கள் நீங்க எங்கும் கிளர்ச்சி செய்ய,
அன்பனே! உன்னால் ஆகுமோ?"—என்றுரைத்தாள்.
"தாயே! நின் துயரம் தவிர்க்க உழைத்திடுவேன்;
நாயேனுக்(கு) ஆசி நல்கிடுவாய்!"—என்(று) இரந்தேன்.
தாயின் மணிக்கரம் என் தலையிலே பட்டவுடன்,
மேய பெரும் இன்பத்தை வியந்தே விழித்திட்டேன்.
கண்டவையெல்லாம் கனவென்(று) அறிந்தபின்பு,
கொண்ட பெருந்துயரைக் கூறும் திறமில்லேன்.
தமிழகத்திலே பிறந்து தமிழகத்திலே வளர்ந்த
தமிழர்களே! இசைத் தாயின் துயர் நீங்க—
நெஞ்சில் உறுதிகொண்டு நேர்மைப் பணி புரிய,
விஞ்சிய உற்சாகமுடன் விரைந்திங்(கு) எழுவீரோ?




# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

இனி மூனை முகத்து நில்லேல்—நீ சண்டை முகத்தில் நெருங்கி நில்லாதே என்பது பொருள். போர்ப்படையில் சேர்ந்து ஊழியம் செய்வதே தங்கள் தொழிலாகக் கருதி ஈடுபட்டவர்களைப் பற்றி இந் நீதி ஓதியதாகக் கருதுவதற்கில்லை. அத்தகையார் தங்களை நடத்தும் படைத்தலைவரின் ஆணைக்கு எல்லா வகையிலும் ஈடுபட வேண்டியவர்களே. 'முனை முகத்து நிற்க மாட்டோம்; முனை முகத்து நில்லேல்; என மூதாட்டியார் மொழிந்துள்ளார்' என்று கூறினால் மறு கணத்தில் சுட்டு வீழ்த்தப்படுவர். ஆதலின் பாட்டியார் கூறியது போர் தொடுப்பவர்களின் வெற்றி தோல்விகளை யுணரும் ஆவலினால் மூன்றாவது மனிதன் இடையில் நிற்பது ஒரு போதும் நன்மைதராது என்பதே இந் நீதியின் கருத்து. தனித்திரு மூர்க்கர்கள் போர் இட்டாலும் அவ் விருவர்கட் கிடையில் ஒருவன் நிற்பதும் தொல்லை விளைவிப்பதாகும். போர்க்குணம் படைத்தோருக்கு நன்மை தீமை, வாழ்வு தாழ்வு, அபாயம் உபாயம் ஒன்றுமே தெரியாது. அது மக்கள் நீர்மை யன்று; விலங்கி னீர்மையை யுடையது. மனிதனாக (பகுத்தறிவுடையனாக) வாழ விரும்பும் எவனும் அத்தகைய சுய வுணர்விழந்து நிற்பவர்களிடையில் நிற்பது கூடா தென்பது ஔவையார் கருத்தாகும். இதற்கு மூலகாரணம் அவரிடம் ஏற்பட்ட பாலிய சிநேகமேயாகும். அதை நினைவூட்டும் குறிப்பாகவே அடுத்த நீதியில் "மூர்க்கரோ டிணங்கேல்" என்றருளினர்.

இது அடுத்த நீதி—தமக்கு அவர் பால் இளமை உண்டாகி யிருந்த நட்பினால் நண்பன் மூர்க்க னென்று தெரிந்தாலும் அவனுக்கு நன்மை செய்யவும் அவன் பகைவனை யெதிர்த்து வெறுக்கவும் நேருகிறது. இது இயற்கையே ஆதலினால் ஆரம்பத்திலேயே மூர்க்கரிடம் ஆராயாமல் சிநேகம் செய்யாதே என எச்சரிக்கை செய்கிறார் மூதாட்டியார். நமது பெரிய பெரிய இதிகாசங்கள் உணர்த்துவதும் இந் நுட்பமே. இராமாயணத்தில் விபீடணனைப் போலவும் பாரதத்தில் விதுரனைப் போலவும் நீதியற்ற நிலை கண்டு சுற்றம் தொடர்பு முதலிய எவற்றையும் கருதாது வெறுத் தொழிக்கக் கூடிய உறுதியாளர் பல கோடியிலும் ஒருவர் இரார். இருப்பரேல் அவர்க்குப் பெருமை தானுண்டோ? குற்றம் தெரிந்தும் அபிமானத்தினைவிட முடியாமல் கும்பகருணனையும், விகர்ணனையும் போல் மனமின்றி மடிபவர்கள் பலர் உண்டு. அபிமானத்தால் குற்றமே தெரியாமல் குரோதம் பாராட்டு

வோர் கோடி கோடியாகக் காணலாம். விபீடணன் இந்திரஜித்தை நோக்கி நிகும்பலைப் படலத்தில்,

"அறந் துணையாவ தல்லால் அருநர கமையநல்க
மறந் துணையாக மாயாப் பழியொடும் வாழமாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை யெய்தும் பொய்ம்மையே துறப்பதல்லால்
பிறந்திலே னிலங்கை வேந்தன் பின்னவன் பிழைத்த போதே.

எனவும்,

"உண்டிலே னறவம் பொய்மை யுரைத்திலன் வலியா லொன்றும்
கொண்டிலேன் மாயவஞ்சம் குறித்திலேன் எவரும் குற்றம்
கண்டில ரென் பாலுண்டே நீயிருங் காண்டிரன்றே
பெண்டிரிற் றிறம்பினோரைத் துறந்தது பிழையிற்றாமோ.

எனவும், தன் உண்மைக் கருத்தை விளக்கியதாகக் காண்கிறோம். இவ்வித சன்மார்க்கப்பற்று எல்லோருக்கும் அமைவ தொன்றன்று; 'மலர் மிசைக் கடவுளின் வரத்தால் நீ நல்லாற்றில் ஈடுபட்டனை உனக்கது தக்கதே. என் போன்றோர்கட்கு இனபிமானம் குலாபிமானம் விலக்கக் கூடியதன்று' எனக் கும்பகர்ணனே கூறி யிருத்தல் காண்க. ஆதலால் முதற்கண் இணக்கமே உத்தமமா யிருத்தல் வேண்டு மென நம் பெருமாட்டியார் அறிவுறுத்துகிறார். வள்ளல்களிற் சிறந்த கர்ணன் உண்மையில் சுயநலங் கருதாப் பெருங் கொடையாளி. ஈகைக்குணம் உடையோர்கள் எவரும் இரக்க மற்றவர்களா யிருக்க முடியாது. ஆனால் கர்ணனோ பாண்டவரை வருத்துவதில் சிறிதும் இரக்கப் படவில்லை. இதற்குக் காரணம் அவன் அந்தரங்க நண்பனாகிய துரியோதனனிடம் வைத்த ஆழ்ந்த அபிமானமே. நல்ல குண முடையவர்களும் அவர்கள் பழகும் நண்பர்கள் பால் கொள்ளும் பிரியத்தால் தீயவர்களாகின்றனர் என்று தெரிகின்றது. இணக்கத்தையும் தள்ளி நெறிவழுவாத உறுதி அடைதல் தவமிக்குடையார்க்கே பலிப்பதாதலினால், சாதாரண நிலையில் மூர்க்க குண முடையாருடன் சிநேகம் செய்யா திருப்பது இளைஞர் கடமையென்றுணர்தல் வேண்டும். எவரிணக்கமு மின்றிப் பிறவியிலேயே தீமையை எதிர்க்கும் உறுதியான மனோ திடம் பிரகல்லாதனைத் தவிர வேறெவருக்கிருக்கும்' என் இவன் தோற்றமே பாவத்தை முறியடித்துத் தருமத்தை நிலை நிறுத்த வந்தது. இவன் உறுதியைப் பெற்ற தந்தையும் குல குருவும், கொலைக் கருவிகளும் நடுக்கந்தரும நஞ்சும் மும்மத யானையும் மலைமுகடும் என் செய்தன? நாணி வலி யிழந்து சலித்தன. இதைக் கொண்டே பழம் பிறப்புண்மையை எளிதில் உணரலாம். இப் புனிதவித்து எல்லாம்வல்ல இறைவனருளால் அங்குரிப்ப தாதலின் ஏனைய இளைஞர்களிடம் அவ்வித இயல்பு எதிர்பார்க்க முடியுமோ? சது யுகங்களிலும் இத்தகைய தவத் தோன்றல்கள் விரல் விட் டெண்ணக் கூடியவர்களே யாதலினால் ஒவ்வொருவரும் மூர்க்கர்க ளென்று எண்ணத்தக்க துன்மார்க்கர்களுடன் தொடர்பு கொள்ளாமல் விலகுதல் முதற் கடனாகும்.

இனி "மேல்வினைல்லாள் தோள் சேர்" என்னும் நீதி. இது இளமைப் பருவங் கடந்து யௌவனப் பருவத்தினை யடைபவர்களுக்கே கூறப்பட்டதென்ப துறுதி.

மெல்லினல்லாள் என்னும் ஒரு மொழி மெல், இல்லின், நல்லாள் என மூன்று பிரிவுகளை யுடையது. இதற்கு மெல்லிய—மிருதுவான இல்லின்—மனைக்குரிய, நல்லாள்—பெண்ணையே சேர்வாயாக என்று கூறியதாகும். அதாவது நீ மனையாளாக மணம் செய்த மங்கையைத் தவிர வேறு பெண்ணை அடையாதே என்றுரைத்ததாகும்.

எந் நாட்டிலும் எம் மொழியிலும் மனையாளையே நேசிப்பது புகழ்ச்சிக்குரிய செயல் என்பதை உணராதவரும், உரையாதவரும் இல்லை. உணர்ந்தும் உரைத்தும் அப் புகழ்ச்சிக்கு மாறாக நடக்க முற்படுவோர் பலப்பலர்.

திருவள்ளுவ நாயனாரும் அறன் வலியுறுத்தல் என்னும் முதற்பகுதிக்கு இல்வாழ்க்கையாகிய அதிகாரத்தையே அஸ்திவாரமாக நிறுவியுள்ளார். அவர்,

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போய்ப் பெறுவ தெவன்"

என்னும் குறட்பாவால் எல்லா ஆச்சிரமிகளும் இயல்பினால் இல்லறம் புரிவானுக்கு மேம்பட்டவர் ஆகார் எனத் தெள்ளிதிற் புகட்டியுள்ளார். இயல்பினால் என்பது ஈண்டு கூர்ந்து சிந்திககற்பாலது. செல்வத்தாலும் கல்வியாலும் கொடையாலும் எத்துணை சிறந்தவனாயினும் ஒருவன் மனையாள் மனம் வருந்தப் பிறமாதரை விழைவானாகில் அவன் இயல்பாக இல்லறம் புரிபவனாக மாட்டான். நம் நாட்டில் உள்ள பல பரதார விருப்பர்கள், 'ஓ! இது ஒரு குற்றமாகவே ஆடவர் விஷயத்தில் கொள்ளக் கூடாது. அது இயற்கை. தவிரவும் இதெல்லாம் பிரைவேட் சமாச்சாரம்' என்று சட்டம் பேசுவதும் சர்வசாதாரணம். இந்தப் புதிய சட்டத்தை அப் பொய்யா மொழிப் புலவர் உணராதமையால்,

"புகழ்புரிந் தில்லி லோர்க்கில்லை இகழ்வார் முன்
ஏறுபோற் பீடு நடை."

என்றருளிச் சென்றார்.

மூவுலகங்களுக்கு முதல்வன் என்று போற்றப்படும் இந்திரனே கௌதம பத்தினியாகிய அகலிகையின் கற்பினை வஞ்சகத்தால் அழித்து முக்கண்ணன் அனைய முனிவர் பெருமானால் ஆயிரம் பெண் குறிகள் உடலெல்லாம் வந்தமையப் பெற்றான். இதனை வெகு அழகாகக் கம்பநாடார்,

"தையலாள் நயன வேலும் மன்மதன் சரமும் பாய
உய்யலாம் உறுதி நாடி யுழல்பவன் ஒருநாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி மாமுனிக் கற்றம் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்றன் உருவமே கொண்டு புக்கான்"

"வரந்தரு முனிவ னங்கே வருதலும் வெருவி மாயா
நிரந்தரம் உலகினுக்கு நெடும்பழி பூண்டாள் நின்றான்
புரந்தரன் நடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போக லுற்றான்"

"தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவன் அவனை யின்கைச் சுடுசரம் அனைய சொல்லால்
ஆயிர மாதர்க் குள்ள அறிகுறி யுனக் குண்டா கென்
றேயினன் அவை யெலாம் வந்தியைந்தன இமைப்பின் முன்னம்"

"எல்லையில் நாணமெய்தி யாவர்க்கும் நகைவந் தெய்த
புல்லிய பழியினேடும் புரந்தரன் போய பின்றை
மெல்லியலாளை நோக்கி விலைமக ளனைய நீயும்
கல்லியலாதி யென்றான்."

எனவும் வரும் செய்யுள்களால் பாதாரத்தை நாடுவோர் ரிஷபம் போல் கம்பீரமாக நிமிர்ந்து நடக்க முடியாதென்று நாயனர் சுட்டிக் காட்டியது பொருத்தமாயிற்று. கம்பர் அமமட்டோடு நில்லாமல் அத்தகையார் பூனை போற் பதுங்கி மறைய வேண்டியவர் என்பதையும் விளக்கினர்.

இந்திர பட்டம் பெற்ற நகுஷன் இந்திராணியை விரும்பியதன் பயனை,

"சுகுடம் சேர் பரிமக நூறியற்றி வானரசு கன்னற் சுவைபோற் பெற்றேன்
சகுடம்சேர் அவன் மனதிற் சகிகாமம் பிடித்தலைப்பத் தலைகீழாக
மகுடம்போய் வானகம்போய் வையகம்போய் மலைப் பாம்பாக
நகுடன்போய்ப் பட்டகதை யறியாயோ சிறியாயோ நளினத் தாரோய்."

என்ற கவியால் மலைப்பாம்பாகி வனத்தில் கிடந்தானென்று விளங்குகிறது. இதற்கு மேம்பட்ட இழிகதை வேறில்லை. பிற மத அறிஞரும் எதிலார் இற்கட் குருடனாய் நிற்பவருக்கு வேறு அறமே வேண்டுவதன்றென ஓதி வைத்தனர். உலகம் போற்றும் காந்தியடிகள் ஸ்தாபித்திருக்கும் போனிக்ஸ் நகரக் கலாசாலையில் மாணவர்களுக்கு ஏற்படுத்திய விதிகளில் நுண்ணிடை மடவார் எதிர் வரில் நோக்காதிருப்பது முதலாவஃது. நோக்கினு லென்ன? பார்ப்பதால் என் மனம் நெகிழா தென்று பந்தயம் பேசுவோர் பலர். இதே சமாதானம் கூறி இளமங்கையர்களிடம் பழகும் துறவிகளும் இல்லாமல் இல்லை. இது இயற்கைக்கு விரோதம். இந்த உலகை ஏய்க்கும வாதத்தைக் காந்தியடிகளா ஏற்பவர்? இந்தப் பரீட்சையில் கோடியில் ஒருவர் தேறலாம். சில சமையம் அதுவும் அருமையாகலாம். இந்தக் கொடிய கேட்டைத் தவிர்க்கவே மனையாளை நேசித்து இயல்புடன் ஒழுகும்படி மூதாட்டியார் கூறுகிறார். ஈண்டு மெல்லிய இயல்பை யுடையவள் என்ற கூறியுள்ள நுட்பம் கவனிக்கத்தக்கது. மென்மைத் தன்மை பிற மாதருக்கும் இருக்கும். மனையாளுக்கு மட்டில் மெல்லிய தன்மை யுண்டென்ப தெப்படி? மனையாளாக வாய்ந்தவள் சில சமயம் வன்மையுள்ள சரீர திடம் உள்ளவளாகவும் நேரலாம். பர மாதர் இம் மனையாளை விட மிருதுவான தேக முடையவளா யிருக்கலாம். ஆதலினுல் ஈண்டு ஔவையார் மெல்லிய இல்லின் நல்லாள் என்றதால் மென்மையும் நற்குணமும் உடைய மனைக்கிழத்தி யென்றருளினர். மென்மைத் தன்மை நிறைகாக்கும் உறுதியுடைய உள்ளத் தன்மையையே குறிப்பதாகக் கொள்ளுதல் வேண்டும். மணம் புரிந்த கணவனை வஞ்சித்து அயலாடவனை நாடும் மங்கையின் உள்ளம் இரக்க மற்ற கனமுரம்பிற் கொப்பாகும். ஆதலினுல் அன்னரின் உடல் மென்மையைக் குறியாமல் உளமென்மையையே குறித்ததாக உணர்தல் வேண்டும். தீமைக் கஞ்சாத உளத்தை மெல்லிய தென்று எவ்வாறு கொள்ள முடியும்? பழிக்கஞ்சாத மங்கையர் உளத்தை மென்மையுடையதாக எங்ஙனம் கருதலாம்? இக் குறிப்பைப் பிராட்டியார் கூற்றாகக் கம்பநாடர்,

"உன்னினர் பிறரென வுணர்ந்தும் உய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியிற் றூங்கவும்
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின் வேறரக்கியர் யாண்டையார் கொலோ."

என்று விளக்கிவைத்தார். தன்னை அன்னியன் கருதினனாக வுணர்ந்த பொழுதே உயிரை விட வேண்டுமென்பது முதற் கொள்கை. இரண்டாவது தகாத சொற்கள் அக்காமுகனாலும் பிறராலும் செவி சுடக் கேட்டும் உயிரைப் போற்றி வாழ்தல் தகா தென்பது. இவ் விரண்டு அவமானங்களையும் பொறுத்துக் கொண்டு உயிரை விடாமல் காக்கும் யான் அரக்கியல்லவோ? என்னை விட கொடிய அரக்கியர் எங்கிருக்கின்றனர்? என்று பிராட்டி கூறியிருத்தலால் பழி பாவங்கட் கஞ்சாத பெண்டிரை மெல்லிய உள்ளத்தினரென மூதாட்டியார் எவ்வாறு கூறுவர்? எனவே ஔவையார் உரைத்த மெல், இல், நல்லாள் என்ற தொடரில் மெல்லிய பண்பு உடலுக்கு என்று கொள்ளாமல் உளத்திற்கே யென்று பொருள் கோடல் பொருத்த முடையதாகும். இல்லாளினும் பொல்லாள் உண்டு. அதைக் குறிக்கவே நல்லாள் என்று சிறப்பித்ததும், உரிய மனையாளுடன் கூடி வாழ்வதில் எவ்வித துன்பங்கள் விளையவும் இடமில்லை. கள்ள நட்பினாலேயே எண்ண முடியாத தீங்குகள் வந்தடைதல் இயல்பு. முதற்கண் பொய்த்தன்மை, ஒளித் தொழுகுதல், ஆபத்து, பகைமை, அவமானம், சில சமயம் உயிருக்கே மோசம் இவைகளுக்கு ஈடு பட்டே யாகவேண்டும். கொலைக் குற்றம் எங்கு ஏற்பட்டாலும் அதற்கு மூல காரணம் தனக்கு உரியரல்லாத மாதர்களை நேசித்துக் கள்ளத்தனமாக ஒழுகுவது தானென்பது அறிஞர் கண்ட முடிவு. கொலைக்கு மேற்பட்ட கொடுஞ் செயல் வேறில்லை யாதலின் அதனை யுண்டு பண்ணும் கெட்ட நடையை விடப் பெரிய கேட்டைத் தரும் செய்கையுமில்லை. ஆதலினால் நம் நீதியம்மையார்—மெல்லினல்லாள் தோள் சேர் என்று கூறி யருளினர். மக்கள் துன்பச் சேற்றில் விழுந்து இடர்படாமல் இன்பப் பெருக்கில் திளைக்கவே உரைக்கப் பட்டதாகும்.

இனி இதற்கு அரண் செய்வதாகவே 'மேன் மக்கள் சொற்கேள்' என்ற அடுத்த நீதி. இதற்கு அறிவினாலும் நடையாலும் உயர்ந்தவர்களின் சொற்படி கேட்டு நீ நடத்தல் வேண்டுமென்பது பொருள். பொருளால் உயர்ந்தவர்களையோ குலத்தால் உயர்ந்தவர்களையோ தோற்றத்தால் உயர்ந்தவர்களையோ கல்வியால் மட்டில் உயர்ந்தவர்களையோ இம்மேன் மக்கள் என்ற மொழி குறித்த தன்று. கல்வி, அறிவு, ஒழுக்கம் மூன்றாலும் சிறந்தவர்களைத் தான் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். நிரம்பிய கல்வி யிருந்தும் நேர்மையான நடையிலாதாரும் உண்டு. இவர்களைவிடக் கல்வியே யில்லாமல் இயற்கை யறிவும் நல்லொழுக்கமு முடையவர்களே சிறந்தவ ராவர். கல்வி யென்பது இயற்கை யறிவிற்குத் துணை செய்வதே யன்றி வேறில்லை. கல்வியினால் கூர்மை பெற்ற அறிவைக் கொண்டு அதிக சாதுரியமாகக் குற்றங்களைச் செய்யும் ஒரு சிலர் இருக்கலாம் அத்தகையாரின் கல்வி என்ன பயனைத் தந்தது? எனவே இயற்கை யறிவாற் சிறந்தவர்களையே மேன் மக்களாகக் கொண்டு அவர்கள் சொற்படி நடத்தல் இன்றியமையாக் கடமையாகக் கொள்ளல் வேண்டும். இது பற்றியே 'கற்கக் கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக' எனறருளியதும்.

"ஏகம்முதற் கல்விமுளைத் தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகமுதற் றிண்கிளை போக்கி யருந்தவத்தின்
சாகந்தழைத் தன்பரும்பித் தருமம் மலர்ந்து
போகக்கனி யொன்று பழுத்தது போலும்"

எனக் கல்வியின் வளர்ச்சிநிலையைக் கம்ப நாடரும் விரித்துள்ளார்.

"பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர், சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்" என்ற மூதுரையும் இதையே குறிக்கும்.

அட்டாலும் பால் சுவையிற் குன்றாதது போன்றும் சுட்டாலும் ஒளி மிகும் தங்கம் போன்றும் பின்னும் புகழ்பட வாழ்பவர்களே மேன் மக்களாவர். இன்னல் வந்துற்ற காலை அமைதியிழந்து செம்மையுள்ளம் வெம்மையுள்ளமாக மாறுபடுவோர் மேன் மக்களாக மாட்டார். எத்துணை மேம்பாடு உடையோரும் தமக்கு மேம்பாடு உண்டென்று எண்ணுவராயின் அவ் வெண்ணம் ஒன்றே அவர்தமைக் கீழ் நிலையிற் கொண்டு வரும் சாதனமாகும். இதை யுணர்த்தவே,

"நாம் பெரியர் என்னுமதை நாடா திருப்பவர்கள்
தாம் பெரியர் என்று மறைசாற்றி விடும்—நாம் பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல்"

என்ற வெண்பாவும் எழுந்ததென்க. ஆதலின் மேன் மக்களாக வாழ்ந்து உலகோபகாரமாக நந்நீதிகளை வரைந்து வைத்த மேன்மக்களானோர் சொல்லிய நெறியின் வழி கேட்டு அதன்படி நட என்றருளினர் அன்னையார். அவ்வாறின்றி தற்காலம் உள்ள மேன் மக்கள் எவர் எனத் தேடிக் காண வேண்டுமென்பதன்று என்பது தெளிவு.

குறிப்பு:—இக் கட்டுரையில், "மெல்லி நல்லாள் தோள் சேர்" என்னும் நீதி மொழியை விளக்க முற்பட்ட ஸ்ரீமதி அசலாம்பிகை அம்மையார், ஆடவர்கள் தங்கள் மனைவியரை யன்றிப் பிறமாதரை விரும்பக் கூடாது என்று கூறும் இடத்தில் எடுத்துக் காட்டியுள்ள திருக்குறள் மேற்கோள் அவ் விடத்துக்குச் சிறிதும் பொருத்தமற்றதாக இருப்பதோடு தவறான பொருளையுங் கொடுப்பதாக இருக்கிறது. "புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன், ஏறுபோற் பீடு நடை" என்ற குறளுக்கு, "புகழை விரும்பிய மனைவியைப் பெற்றில்லாதவர்களுக்குத் தம்மை இகழ்ந்துரைக்கும் பகைவர் முன்னே ஆண் சிங்கம் போல நடக்கும் பெருமித நடை இல்லை" என்பதே பொருளாகும். மனைவி கற்புடையவளா யிருந்தால் பகைவரிடையே நாணமின்றிச் செல்லாம் என்று திருவள்ளுவா கூறினரே யொழிய, அம்மையார் எழுதி யிருப்பதுபோல் பரதாரத்தை நாடுவோா ரிஷபம்போல் கம்பீரமாக நிமிர்ந்து நடக்க முடியாது எனப் பொருள்படும்படி கூறவில்லை. ஆகவே வாசகர்கள் இவ் விடத்தில் திரிபுணர்ச்சி கொள்ளாது திருத்தி வாசித்துப் பயனடையுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். [ப. ர்.]

# தேசபக்தன் கனகசபை

(எம். கோவிந்தராஜ்)

மாலை நேரம். மந்தமாருதம் மனதைக் குளிரச் செய்ய ஜில்லென்று வீசுகிறது. கதிரவனும், வறியோர்களை வாட்டி வருத்தி அவர்களிடமிருந்து வேலை வாங்கிக் கொண்டு தக்க கூலி கொடுக்காது, தவிக்கவிடும் தனவந்தர்களின் கொடுமையையும், தீண்டாதார் என்று கோடிக் கணக்கான மக்களை கேவலப் படுத்தும் ஜாதி இந்துக்களின் கொடுரத்தையும், இழந்த தேசத்தை திரும்பிப் பெறவேண்டும் என்ற கருத்தோடு உழைக்கும் மனம் கலங்கா தேச பக்தர்களுக்கு இடையூறாக இருக்கும் யதேச்சாதிகார ஆட்சியையும், சுதந்தர போராட்டத்திற்கு முட்டுக் கட்டை போட்டு சுய தேசத்தைக் காட்டிக் கொடுக்கும் சுத்த முட்டாள்களின் சுயநலத் தன்மையையும் காண மனம் சகியாமல் சுதந்தர நாட்டைக் காணச் சென்றான். அஞ்சோம், அஞ்சோம் என்று முரசடித்துச் செல்லும் சுதந்தர வீரனைப் போல ஆற்றின் ஜலம் அதிவேகமாக ஓடுகிறது. அவ்வாற்றின் கரையின் மேல் அழகும் ஆற்றலும் நிறைந்த உடல், தூய கதர் ஆடை அணிந்து, அபயம் என்று வருவோரை ஆதரிக்கும் குணம், அடிமை வாழ்க்கையை அழிக்க கங்கணம் கட்டியுள்ள சிந்தையுடைய அஹிம்சா வீரன் ஒருவன் உட்கார்ந்து கொண்டு ஆழ்ந்த சிந்தனையி லிருந்தான்.

“அம்மா! அப்பா!!” என்ற சப்தம் நமது வாலிபனை திடுக்கிடச் செய்தது. திரும்பிப் பார்த்தான். அருகில் ஒரு குடிசை, அச் சத்தம் அதிலிருந்து வந்ததால் அங்கு சென்றான். அவ்விடம் கண்ட காட்சி அவனை அப்படியே ஆழ்ந்த துக்க சாகரத்தில் அமிழ்த்தியது. ஒரு கிழிந்த பாயில் கந்தை துணி உடுத்திக் கொண்டு சேற்றில் முளைத்த செந்தாமரையைப் போன்ற இயற்கை அழகோடு கூடிய ஓர் இளம் நங்கை பேசவும் சக்தியற்றிருப்பதைக் கண்டான். வாலிபன் மனம் உருகிற்று. ஏழை மக்களின் நிலைமையை உணர்ந்தான். கண்ணீர் வடித்தான். பக்கத்திலிருந்த தண்ணீரை எடுத்து அவளுடைய வாயில் கொஞ்சம் ஊற்றினான். தன் கை குட்டையால் முகத்தைத் துடைத்தான். சிறுமி “அப்பா!’ என்று கண்ணை விழித்து சுற்றும் முற்றும் மிரள மிரள விழித்தாள். வாலிபனைக் கண்டாள். “தாங்கள் யார்” என்றாள். அதற்கு மேல் பேச நாவெழவில்லை. வாலிபன் யுவதியை உற்று நோக்கினான் உள்ளத்தில் ஒருவகை ஆனந்தம் கொண்டு “நான் உன்னை காப்பாற்றுகிறேன் தைரியமாயிரு,” என்றதும் யாரோ வரும் காலடி சப்தம் கேட்டது. வாலிபன் திரும்பிப் பார்த்தான். கன்னி தன் காவலனை பார்த்த வண்ணமே கண்ணை மூடினாள்.

* * * *

“சாமி! சாமி!! சாமி!!!”

உள்ளே யிருந்து குரல், "யாரடா அவன் வெளியிலிருந்து கத்து கிறவன் ?"

"நான்தா னம்மா இருளன். தயவு செய்து கொஞ்சம் கதவைத் திற வுங்கள்."

கதவு மறைவிலிருந்து "என்டா சுவாமியைக் கூப்பிட்டாய்,"

"என் மகள் கருப்பிக்கு கடுஞ் சுரம். மூடின கண் திறக்கவில்லை. என்னால் முடிந்த தெல்லாம் செய்து பார்த்தேன். எதற்கும் குணப்பட வில்லை. அதனால் நம்ம அய்யரிடம் கொஞ்சம் மருந்து வாங்கி போகலாம் என்று வந்தேன்."

சுப்பி அம்மாள்—(கொஞ்சம் எட்டிப் பார்த்து) "அடா சண்டாளா பாவி, கட்டேலே போறவனே. பிராமணாள் வீதியில் சாப்பிடும் பொழுது போகக் கூடாது என்ற அறிவில்லாமல் இந் நேரத்தில் வந்த பறக்கழுதை! உன்னை பார்த்த தோஷம். இன்னொரு தடவைப் போய் குளித்து தொலைக்கனுமே! உடம்பும் சரியாயில்லை. அதற்குள் அய்யர் வந்துவிடுவார். உன்னால் எத்தனை தொல்லை. சீ! போ; போ; போடா பற நாயே" என்று சொல்லிக் கொண்டே கதவை தடாலென்று மூடிக் கொண்டு போய் விட்டாள்.

இருளனுக்கோ ஒன்றும் தோன்றவில்லை. அம்மாளே இப்படி வைதால் அய்யர் வந்தால் என்ன சொல்வாரோ? என்று பயந்தான். திரும்பி வீட்டிற்குப் போகவும் மனம் வரவில்லை இருளனுக்கு உயிர் கருப்பாயி ஒருத்தி தான். அவள் பிறந்ததும் தாயை இழந்தாள். பிறகு இருளன் அவளை அன்பாகவும் செல்வமாகவும வளர்த்து வந்தான். கருப்பாயி செயற்கை அழகு இல்லாவிடினும் இயற்கை அழகு வாய்ந்தவள். இருளன் வயல்களில் வேலை செய்தும், மாட்டுத் தோல் உறித்து விற்றும், செருபபு தைததும் கீத்து முடைந்தும் சம்பாதித்த பொருளைக் கொண்டு அவ்வூர் கிராமப் பள்ளிக்கூடத்தில கருப்பியைப் படிக்க வைத்தான். கருப்பியும நன்றாய் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டாள். அவளும் 10 வயது நிரம்பிய பக்குவ மங்கையானாள். இருளன் அவளை யாராவது படித்த பையனுக்கு கலியாணம செய்து கொடுககலாம் என்று இருந்தான். அந்த அருமை மகள் படும் கஷ்டத்தைக் கண்டு மனம் சகியாமல் மருந்து வாங்குவதற்காக அய்யரைத் தேடி வந்தான்.

ஆத்தூர் என்ற அந்த கிராமம் தஞ்சாவூரிலிருந்து 16 மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கு ஒரு வைத்தியசாலை கூட கிடையாது. அந்த ஊர் ஆலயப் புரோகிதர் அப்பு அய்யருக்கு கொஞ்சம் வைத்தியம் தெரியும். அதனால்தான் இருளன் அய்யரை நாடி வந்தான.

அய்யர் இவனைக் கண்டதும் சிகப்பு துணியைக் கண்டு மிரளும் மாடு களைப் போல், "சிவ! சிவ! என்று சொல்லிக் கொண்டே 40, 50 கஜ தூரத் தில் நிற்கும் இருளனைப் பார்த்து, "அடே! உன் ஏழவெடுகக! நீசப் பயலே !! உன் வீடு குட்டிச் சுவராப் போக" என்று வாயில வந்த விதமெல் லாம் வசை புராணம் பாடினார்.

கம்மிய குரலில் நீர் ததும்பிய கண்களுடன் மெதுவாக "சுவாமி! நான் கஞ்சிகூட குடிக்கவில்லை. என் மகள் படுத்த படுக்கையாக இருக்கிறாள்.

தயவு செய்து ஏதாவது மருந்து கொடுங்கள். உங்களுக்கு ஒரு ஜோடி செருப்பு தைத்து தருகிறேன். உங்களையன்றி வேறு கதியில்லை.'' என்றான்.

அய்யர்—"மருந்துமில்லை ஒன்றுமில்லை; போடாப் பற நாயே. என் ஆசாரத்தைக் கெடுத்த உனக்கு ஔடதம் வேறு'' என்று உறுமிக் கொண்டே போய் விட்டார். இருளன் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக, ஐயோ இந்த கொடுமையால் தானே நம்மாபினர் அன்னிய மதத்தைத் தழுவுகின்றனர் என்று வருந்திக் கொண்டே குடிசையை நோக்கி கால் தடுமாற நடந்து வந்தான்.

* * * *

அன்று வெள்ளிக்கிழமை. வேனிற் கால விடுமுறைக்காக, கல்லூரி மூடப்பட்டதால் கனகசபை கும்பகோணத்திலிருந்து தன் சொந்த ஊராகிய ஆத்தூருக்கு வந்தான். அவன் அந்த ஊர் பிரபல மிராசுதாராகிய கோபால்சாமி முதலியாரின் ஏகபுத்திரன். கும்பகோணத்தில் பி. ஏ வகுப்பில் படித்து பரீக்ஷை எழுதி விட்டு வந்திருக்கிறான். ஏழைகளிடத்தில் அன்புள்ளவன். நம் தேசம் காங்கிரசாலும், கதராலும், கலப்பு மணத்தினாலும் தான் விடுதலை அடைய முடியும் என்ற வீரக் கொள்கையுடையவன். சமூக சீர் திருத்தத்திற்குத் தடையாக க்ஙாதனிகள் வெடிகுண்டு போட்டாலும் சற்று தயங்கா சற்குண வீரன். 'ஜாதி மத பேதத்தை அறவே ஒழிக்க வேண்டும், ஏழை என்றும் அடிமை என்றும் எவனும் இந்தியாவில் இருக்கக் கூடாது. விவசாயிகள் தானே தேசத்தின் முதுகெலும்பு; ஆகையால் அவர் குறைகளை நிலச் சுவான்தார்கள் கவனிக்கவேண்டும் என்று என்று அவனுடைய தோழர்களிடத்தும் கும்பகோணம் காங்கிரஸ் பார்க்கிலும் யாருக்கும் அஞ்சாது அறிவிக்கும் வீரன். இவ்வளவு அவ்விளைஞனைப்பற்றிக் கூறினால் போதும்.

* * * *

இருளன் குடிசையினுள் வந்தான்; கனகசபையைக் கண்டான். காராக்கிரகம் செல்ல இருக்கும் கைதியைப் போல் வெருண்டு நோக்கினான். மிராசுதாரின் மகன் என்று தெரிந்ததும் "ஆண்டே! தாங்கள் இங்கு இருக்கும் விஷயம் தங்கள் தந்தைக்கு தெரிந்தால்; என்னையும் என் மகனையும் குடிசையோடு சேர்த்து தீயிட்டு விடுவார்களே! மேலும் தாங்கள் என் குடிசையினுள் வந்த சமாச்சாரம் தங்கள் சுற்றத்தார்களுக்கு தெரிந்தால், தங்களை வெறுத்து இழிவாகப் பேசுவார்கள். ஆகையால் தாங்கள் தயவு செய்து வெளியே சென்று விடுங்கள்.''

கனகசபை அவனுடைய பரிதாபமான நிலைமையைக் கண்டு "அப்பா! நீ யாதொன்றுக்கும் அஞ்சாதே. ஹரிஜனங்களாகிய உங்களை ஆதரிக்க அவனியில் அவதரித்துள்ள மகாத்மாகாந்தி அவர்களையும் பண்டித ஜவஹர்லால் நேரு இவர்களையும் மற்றும் பெரிய தேசோத்தமர்களையும் வெறுக்கும் பிற்போக்கும் முட்டாள் தனமும் முள்ள சமூகம் என்னை வெறுத்தால் நான் கவலைப்படப் போவதில்லை. இந்த தீண்டாமை என்ற கொடிய நஞ்சையும் அது பற்றியுள்ள மக்களையும் விடுவிக்கும் உணர்ச்சிதான் என் இரத்தத்தில் ஊறிக் கொண்டிருக்கிறது. ஆகையால் நீ பயப்படாதே! நான் என் உயிர் போனாலும் உங்களைக் கைவிடேன்.

என் வீட்டிற்கு போய் இந்த மலேரியா சுரத்திற்கு, 'குவனைன்' மாத்திரை கொடுக்க வேண்டியதால் அதை நான் எடுத்து வருகிறேன். நீ உன் மகளை ஜாக்கிரதையாக பார்த்துக்கொள்," என்று கூறி ஓட்டமும் நடையுமாக கனகசபை வீட்டிற்கு வந்தான். அப்பொழுது அவன் தந்தையும் தாயும் ஆலயம் சென்றிருந்ததால், அலமாரி சாவி அவ்விடம் இல்லை. கோயிலுக்குள் சென்று கொத்துசாவி வாங்கி வருவதற்குள் குமரிக்கு ஏதாவது விபரீதம் நடந்து விட்டால் என்ன செய்வது என்று யோசித்து கண்ணாடி அலமாரியை உடைத்து மருந்தை எடுத்துக் கொண்டு மான்போல் குடிசைக்கு வந்து சேர்ந்தான்.

கொண்டுவந்த மாத்திரையில் இரண்டை கருப்பிக்கு கொடுத்துவிட்டு இருளனிடம் இரண்டணா கொடுத்து பால் வாங்கிவரச் சொன்னான். இருளன் பால் வாங்கி வருவதற்குள் கருப்பியின் கடுஞ் சுரம் நின்று கடைக் கண்ணால் கனகசபையைக் கவனித்தாள். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து மௌன முற்றனர். பிறகு இருளன் கஷ்டமின்றி யிருக்கும் கருப்பி யைக் கண்டதும் கண்ணிழந்த ஒருவன் திரும்பவும் கண் பார்வையைப் பெற்றால் எவ்வளவு சந்தோஷ மடைவானோ அதைவிட பன்மடங்கு சந்தோஷ மடைந்து வாலிபனை வாயாரப் போற்றி மனதார வாழ்த்தினான். கனக சபை தன்னிடமிருந்த இரண்டு ரூபாயைக் கொடுத்து அரிசி வாங்கிவந்து கருப்பிக்கு கஞ்சி வைத்துக் கொடுக்கும்படியும் தான் நாளை வந்து பார்ப்பதாக வும் கூறிச் சென்றான்.

கோபால்சாமி முதலியார் 100 ஏக்கர் நிலத்துக்குச் சொந்தக்காரர். ஏழை களின் இரத்தத்தை அட்டைபோல் உறிஞ்சுவதில் அவருக்கு இணை ஆத்தூரி லும் சுற்று புறத்திலும் கிடையாது. தருமம் என்ற பக்கம் தலை வைத்தும் படுக்க மாட்டார். காந்தி, காங்கிரஸ், கதர் என்றால் இவையெல்லாம் ஊரைக் கெடுக்க வந்த உபகருவிகள் என்று உரைப்பார். ஹரிஜனங்களைக் கண்டால் அடித்து துரத்துவார். அவரிடம் வேலை பார்க்கும் ஆட்களுக்கு தக்க கூலி கொடார். தன்னுடைய புத்திரனை ஓர் டிப்டி கலெக்டராகச் செய்துவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் தான் கும்பகோணத்தில் படிக்க வைத்தார். மேலும் தன் அந்தஸ்துக்குத் தக்க இடத்தில் பெண் பார்த்து கலியாணம் செய்ய வேண்டு மென்றிருந்தார்.

* * * *

அந்தி நேரம், ஆதவனின் இன்ப ஒளி தென்றல் காற்று மனதை பரவசப் படுத்துகிறது. ஆற்றங் கரையில் இரு காதலர்கள் அளவளாவி யிருக்கும் சமயம் "அட பாவி!" என்ற சபதம் அவர்கள் உடலை அதிர்ச்சியுறச் செய்தது. அவ்வமயம் கோபால்சாமி முதலியாரும் கணக்கன் கணபதி அய்யரும் முன் தோன்றினர். காதலர் இருவரும் மனம் கலங்கி நின்றனர். இருவரையுங் கண்ட முதலியார் அடங்கா கோபத்துடன் "அட குலத்தைக் கெடுக்க வந்த கோடாலி காம்பே! பறச்சியைப் பாரியாக நினைத்த பாதகா!! என் முன் நில்லாதே, சீ! போடா துரோகி!!!" என்று கர்ஜித்து விட்டு வீட்டை நோக்கி வேகமாகப் போனார்.

கருப்பியின் உடல் அச்சத்தால் ஆடியது. "ஐயோ எனக்காக தாங்கள் தந்தையின் வெறுப்பை அடைந்தீர்களே! என்னை மறந்து விடுங்கள்.

தங்களைக் கணவனாக பெறும் பாக்கியம் இந்த யுகத்தில் இல்லை" என்று கண்ணீர் விட்டாள்

கனகசபை—"காதலி நீ யாதொன்றுக்கும் அஞ்சாதே! ஒருவன் கொண்ட கொள்கையை நிறைவேற்றாவிடில் அவன் வீரனல்ல, தேசத் துரோகியே. எனக்கு தேச சேவைதான் முதல். பிறகுதான் தாய் தந்தையர்" என்று கூறியதைக் கேட்ட கருப்பி அவன் அஞ்சா நெஞ்சைக் கண்டு ஆச்சாரியப் பட்டாள். பிறகு இருவரும் நாளை சந்திப்பதாகப் பிரிந்தனர்.

*                *                *                *

முதலியார் வீட்டிற்கு வந்து நடந்தவைகளை சொன்னார். மனைவியான கோதைநாயகி அம்மாள் முதலில் மகன்மேல் கோபப் பட்டாளாயினும் தன் புத்திரன் மேல் இருந்த அன்பால் கோபத்தை விட்டாள். மொத்தத்தில் நற்குண முடையவள். ஆகையால் தன் கணவனிடம், "இனிமேல் அவன் அவ்விதம் நடக்கா திருக்கும்படியாக சொல்லி, என் தம்பி மகள் சுசீலாவை மணம் செய்து வைப்போம்" என்றாள். முதலியார் புத்திர வாஞ்சையினால் சம்மதித்து, படிப்பறையில் உட்கார்ந்திருக்கும் மகனை அழைத்து வரும்படி சொன்னார். கனகசபை தந்தை கூப்பிட்டவுடன் சென்றான்.

தனயனைக் கண்ட தந்தை—அப்பா! நம்முடைய சாதிக்கும், ஜாதிகளுள் கடையான பறச் சாதிக்கும் ஏணி வைத்தால் கூட எட்டாதே! மேலும் நம் ஜாதியார் நம்மை வெறுப்பார்களே! அப்படியிருக்க அந்த நீசப் பெண்ணை நினைப்பது தகுமா? நீ கருதியதை கனவென்று நினை" என்றார்.

கனகசபை—"அப்பா! உலகில் எல்லோரும் பிறக்கும்பொழுது மனிதர்களாகவே பிறந்தோம். மேல்ஜாதி, கீழ்ஜாதி பணக்காரன், ஏழை என்பதில்லை. தாங்கள் காந்தி, கதர், காங்கிரஸ், தீண்டாமை என்றதும் நீங்கள் கெட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கிறீர்கள். காந்தி சொல்வதை நீங்கள் கருதுவதில்லை. பறையன் என்ற சொல் நம் தேசத்தில் பிறந்த மக்களை அவமதிப்பதாகும். பெரிய பெரிய மகான்கள் எல்லாம் இதை முன்னம் சொல்லியிருக்கிறார்கள். தீண்டாதாருக்காக தன் உயிரையும் தியாகம் செய்ய துணிந்த உலகம் போற்றும் உத்தமர் மகாத்மா காந்தி நம் தேசத்தில் பிறக்க நாம் செய்த பாக்கியமே பாக்கியம். தீண்டாதார் எனப்படுபவர் மனிதரல்லரோ? அவர்களுக்கு மட்டும் தாழ்வென்ன வந்தது? நமக்கு மட்டும் உயர்வென்ன? கருணை நிறைந்த கடவுள் என்று ஒன்று இருக்குமானால் அதன் முன்னிலையில் எல்லோரும் சமமே. நாம் அவர்களை பொது, கிணறு, குளம், கோயில், பள்ளிவீதி முதலியவைகளில் அனுமதிக்காததினால் தான் இன்று நம் தேசம் அந்நியர் ஆட்சியில் சிக்குண்டு அவதிப்படுகிறது. மேலும், பண்டித மாளவியா, பண்டித ஜவஹாலால் நேரு ஆகிய இருவரும் பிராமணர்களில் உயர்ந்த காஷ்மீர தேசத்து பிராமணர்கள். இவர்களும் இவர்கள் குடும்பமும் இன்று நாம் மலத்திலும் கேடாக நினைக்கும் ஏழு கோடி மக்களை மார்போடு தழுவி வரவேற்கின்றார்கள் என்றால் நாம் எதில் உயர்ந்தவர்கள்? தேசத்திற்காக, உடல் பொருள் ஆவியை தத்தம் செய்த குடும்பங்களில் கோடீஸ்வரராகிய நேரு குடும்பம்தான் தலைமை வகிக்கும் என்றால் அது மிகையாது. நாம் அவர்களை விட பொருளில் சிறந்தவர்களா? மேலும் படிப்பில் ஒவ்வொருவரும் பார்—அட்—லா ஐ. ஸி. எஸ் பட்டம்

பெற்றவர்கள் என்றால், நாம் படிப்பில் முற்பட்டவர்களா? ஆகையால் தாங்கள் தயவு செய்து, பணம், ஜாதி, மதம் முதலியவைகளைப் பற்றி சிந்தியாமல் தேச நலனைக் கருதி எனக்கு இருளன் மகள் கருப்பியை உள்ளன்போடு மணம் செய்து வைக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்"

கோ:—"என் கண்ணே! இப்பொழுதுதான் நான், சொத்தையும் சுகத்தையும் கருதாது தேச சேவையில் ஈடுபடுபவரைத் தான் உலகம் போற்றும், வெந்ததை தின்பதும், விதிவந்தால் சாவதும், அதுவரையில ஏழை மக்களை மிருகங்களிலும் கேடாக மதிக்கு மனிதனை உலகம் வெறுக்கும் என்று தெரிந்து கொண்டேன். உன்னுடைய உபந்யாசத்தை கேட்ட இன்றே என் மனம உன்னை பிள்ளையாக பெற்ற பயன் கிடைத்ததாக அறிவிக்கிறது. உனக்கு உயரிய குணத்தைத்தந்தருளிய உத்தமர் காந்தியையும், ஜவஹரையும் நான் கனவிலும் மறவேன் உன் உள்ளப்படி நீ நடந்து கொள். நான் உன் ஆசையைப் பூர்த்தி செய்கிறேன்" என்றார்.

கனகசபைக்கும் காந்திமதிக்கும் (முன் பெயர் கருப்பி) காந்தி நகரில் (முன் பெயர் ஆத்தூர்) கலப்பு தேசிய திருமணம் சிறப்பாக நடந்தேறியது. ஏழைகளுக்கு சுதரும், அன்னமும் வழங்கலாயிற்று. அவ்வூரில் ஒரு தேசிய பாடசாலையும், வைத்தியசாலையும், நூல் நூற்கும் சிறிய கைத்தொழிற்சாலையும் ஏற்பாடாயின. இவைகளை கோபால்சாமி முதலியாரும், இருளனும் மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தார்கள். காதலர்கள் இருவரும் கலப்பற்ற தேசிய வாதிகளாயினர். காந்தி நகரைக் காண கணக்கற்ற மக்கள் வருகின்றனர்.



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## சாங்கிய சூத்திரம்

பின்னர் சப்தப் பிரபஞ்சம் மட்டுமே போதத்திற் கெட்டிக்கொண்டிருந்தது. அதுவும் அடங்கி யொழிந்தது. இஃது இரண்டாம் பாழ்.

பின்னர் சப்தப் பிரபஞ்சத்திற்கு வித்தாயிருந்த விந்துவாகிய வாக்கு மட்டும் மோனமாய்த் தனது நிலையைக் காட்டிக்கொண்டிருந்து தானேடிப் போய் போதத்துள் மறைந்துகொண்டது. இவ்வாறு மோனமும் மறைந்த விடமே மூன்ரும பாழ்.

போதம் பற்றுதற்கு ஓர் களைகண்ணுமில்லாது தானே கேவலமா (தனி நிலைமையில்) யிருந்த விடமுளதே அதுவே "முடிவிலொரு சூனியமாய்" என்ற விடம.

பின்னர் "தனையென்றும் மறந்திருப்ப அருள் வடிவானது தான் தட்டி யெழுந்திருக்கும்" என்றபடி, ஓர் ஒப்பரிய ஆனந்தம், இறைத்துச் சூனிய மாக்கிய கிணறிருந்து நன்னீர் ஊற்றெடுக்குமாபோல் எழுந்து சூனியத்தை விழுங்கி ஆனந்தமயமாயிருந்தது. இதுவே "அப்பால்" என்ற விடமுமாம்.

பின்னா இவ்வானந்தலாகிரி மென்மேலேறவேற போதம் அந்த லாகிரிக்குத் தன்னை யடிமையாகக்கொண்டே அதன்வயமாய்ப் போய்க்கொண்டிருந்தது. இப்போதகும் கெட்டு போதம் ஓர் சிறிதும் வெளிப்படும் ஆற்றலற்று வெட்ட வெறும் வெளியா யிருந்தவிடத்தையே வள்ளுவனர் நான்காவது "பாழ்" என்றனர்.

இவ்வித சிவானந்த லாகிரியை:—

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித், தேட்டற்றிடஞ் சிவ முந்தீபற,

தேடுமிட மதன்றுந் தீபற" என்று உய்யவந்த தேவாருளினர்.

நாஸ்மி எனபதற்கு "நான் ஆண்" ஆகவே பெண்ணல்லன், நானே சர்வத்திற்கு எஜமானனெனவும் பொருள் கொள்ளலா மென்ப.

[எவற்றிற்கும் முடிவு கண்ட இக்கைவல்ய ஞானம் அன்னமய கோசமாகிய தூல தேகத்திருக்கும் புருஷனுக்கு உதயமாவதால் போதரும் பயன் யாது? என்பதனைக் குறிக்கலுற்றார்.]

## 65-வது காரிகை

*தேனஹி விருத்த பிரஸவா மர்த்த வஸாத் சப்தரூபவினி விருத்தாம்—*
*பிரகிருதிம் பஸ்யதிபுருஷஃ பிரேக்ஷக வதவஸ்திதஃ சுஸ்தஃ*

இந்த ஞானத்தை (ஞானநேத்திரமாகிய மந்திரநோக்கை)க் கொண்டு (அரங்கத்திற் கூத்தும்) பார்ப்பானைப்போல் சாவதானமாய் ஓர் தொந்தரவு மின்றிச் சுகமாகப் பிரகிருதியை மற்றும் உற்று நோக்கா நிற்பன். அவளோ ஈனுதலொழிந்து எழுவிதக் கோலங்களைக் கொள்ளக்கூடாமல் தனது திற னழிந்து வாளா நிற்பள்.

உரை. ஞான ரூபத்தை யூடுருவி நுழைந்து பார்த்து விட்டமையால் பந்த மோக்ஷங்களின் தந்திரம் கைக்கொள்ளப்பட்டது.

இத் தந்திரம் கைவந்த நோக்கால் எழுவகைத்தாய் மாயை யெடுக்க வல்ல அஞ்ஞான (அவித்தியா) ரூபத்தை நோக்கலும் அதன் இரகசியம் தென்பட்டதேயன்றி, அவித்தையின் கண் தன்வயநகெட்டு மாட்டிக்கொள் ளப்பட மாட்டான்.

ஈனுத லொழிந்து எழுவிதக்கோலங் கொள்ளாது நின்பள் என்றது, பிர கிருதி தன்னிட மிருந்து புத்தியையும், அதனிட மிருந்து அகங்காரத்தையும், அகங்காரத்து ஓர்வளையினின்று பஞ்ச தன்மாத்திரைகளையும், தன்மாத்தி ரைகளி னின்று பஞ்சபூதங்களையும், அகங்காரத்தின் மற்றோர் கிளையினின்று ஞானேந்திரியங்களையும், கன்மேந்திரியங்களையும் மனத்தையும் வேண்டி யாங்கு உற்பவஞ்செய்ய முடியாமையைக் குறிக்கும்.

மற்றும் அறம், மறம், ஆசை, வைராக்கியம், ஐசுவரியம், அனைசுவரியம், அஞ்ஞானமாகிய எழு பாவங்களுள் ஒன்றையும் மதிக்காது ஞானபாவத் தையே வகித்து நிற்பன்.

ஆதலின் சாங்கியன் மாயையின் சிக்கலை விட்டோடும் வழி கண்டான்; அவன் காத்திருப்பது தனது காலத்தை நோக்கியே. தேகத்தொடக்கறும் தருணத்தைக் காண்டலும் அதனைப் பிடித்துக்கொண்டே கரையேறி விடு வன்.

[இருவரும் காலம் நேரும்வரை யாது செய்வாரெனின்?]

## 66-வது காரிகை

*திருஷ்டாம யேத்யுபேக்ஷகயோகோ திருஷ்டாஹ மித்யு பரமத்யன்யா-*
*சதிஸம் யோகேபி தயோஃ பிரயோஜனம் நாஸ்தி சர்க்கஸ்ய.*

"அவளை நான் கண்டுகொண்டேன்" என்று புருஷன் அவள்பால் மோகம் அறுகின்றான்; அவளும் "என்னையவன் பார்த்து விட்டானே "இனி என் செய்வேன்" என்று அபேக்ஷை கொள்ளாது நிற்பள். இருவரும் கூடி யுறையினும் சிருஷ்டிக்கு வழியற்றுப் போகின்றது.

உரை. பிரபஞ்சத்தோடு சிக்கல் மென்மேலும் உண்டாகாதென்றபடி, மாயையது இரு கூறையுங் கண்டு உடலோடு வாழ்பவன் ஜீவன் முக்தன். பண்டைப் பழவினையாகிய சஞ்சிதமும், புதிது புதிதாய் வினையும் ஆகாமிய மும் ஆகிய இரண்டும் நசிய பிரத்தியக்ஷ போகமாகிய பிராப்தமொன்றுமே நின்று கொண்டிருக்கும். இதுவே தேகத்தை யோட்டும். தேகம் ஆகா

யியமாகிய மேற்கருமத்தால் மேலிழுக்கப்பட்டு சுழன்று வந்து சஞ்சிதத்தோ டொட்டி காலசக்கரத்தில் மாட்டுண்டு ஜனனமரணச் சுழற்கண் அலமாராது மோக்ஷவழி யறியாதான் மரணம் நேரும் காலத்து அணுவாகி மேற்சென்று காரண தேகத்தைத் தொடலும் இவனது ஆசை யொழியாமையின், அக் காரண தேகமாகிய இலிங்கத்தி னுளதாய ஆசாபாவத்தால் கீழிழுக்கப்பட்டு ஆசை காட்டும் சூக்கும தேகத்தைப் பிடித்துத் தூல தேகமாக வினைதற்குக் கருவி னுழலா நிற்பன். இவ்வுண்மையைப் பின்வரும் மெய்கண்டதேவர் வாக்கா லுணர்க,:—

"கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந் தத்தா வினையினாற்—கண்செவி கெட்டு
உள்ளதே தோற்ற உளம் அணுவாய்ச் சென்று மனம்
தள்ளவிழுங் கருவிற் றான்."

வழி கண்டவன் சொற்பனக் காட்சிக்கண் சிக்குண்டு நற்கதி தெரியாது மயங்கிச் சாகமாட்டான். சொற்பனத்தும் ஜாக்கிரமே நிகழும்.

ஜாக்கிரம் யாதோவெனில் சுழுமுனைக்கண் நிற்பதுவாம். காசிப்பதி யாகிய வாரணாசி அவிமுக்தம் என்றும் பேசப்படும். அத்தானத்திற் சிவன் விடாது நின்று அவ்விடத்தி னுயிர்துறப்போரை முத்திக் கரைக்கண் ணுய்ப் பன். இவ் இரகசியத்தை அவிமுக்த ஜாபல உபநிடதத்திற் காண்க. சாங் கியனும் ஜாக்கிரமாகிய புருவமத்தியில் நின்றே, பிராப்தம் உலந்த காலத்தில், முத்திக்கரை யேறிக்கொள்வன்.

[மாயா தந்திரத்தைக் கொள்ளுதலே ஞானம்; இதுவே முத்தியங் கரைக்கண் கொண்டுய்த்தற் கேற்ற தீபம் இத்தகைய ஞானம் கைவரப் பெற்றும் மாயா தந்திர தனுவாகிய தூல தேகத்திலிருந்து அவாவில்லாதும் மாயையோடு தொடக்குண்டு அவளைவிட்டுப் பிரியா துறைதற்குக் காரண மென்னையெனின்?]

## 67-வது காரிகை

சம்யக்ஞாநாதி கமாத்தர்மா தௌநாம காரணப்ராப்தௌ—
திஷ்டதி சம்ஸ்கார வஸாஸ்ச் சக்ரப்ரமவத் திருதஸரீர:

சத்தியமான ஞானம் கைவந்து நிற்பதால் அறம் முதலான எண்ணங்கள் (பாவங்கள்) தமது பலத்தை ஈனுதற் கிடனின்றி வானா நிற்கும்.

சரீரமோ, குயவனது சக்கரம் (பாண்டங்களை வனையாது) முன்னம் நன் றாய் உருட்டிவிட்ட வேகத்தால் சிறிதுகாலம் வாளா சுழன்று கொண்டிருப் பதுபோல், (மேலைக்கரு வித்தாகாது) சிறிது காலம்வரை புருஷனுக்கு வசியும் தானமாய் நின்று சரிக்கும்.

உரை. சாங்கியன் யோகிபோல் சமாதிநிலையை உள்ளவா, அதுவாகிக் கண்டா னல்லன். சாங்கியன் தியானம் வரைசென்று பிறப்பிறப்பைக் கடக் கும் வழியைக் கண்டு கொண்டான். இனி அவ்வழிக்கண் உள்ள இடையூறு களை யடறுத் தன்றே முத்தியைக் கிட்டவேண்டும். இவ் விடையூறுகளோடு தானே போராட முயலின் மிக்க வலியைப் பெறவேண்டும். சாங்கியனோ எளிதே முத்தியை யடையவேண்டி யிருப்பவனாதலின் மாயாசக்திகளோடு போராடுதலை யொழித்து மரண தரிசனத்தின்மாட்டு கண்ணுயிருப்பன்

மரணம் நேரும்போழ்து இடைவழிக்கண் நிற்கும் சகல மாயா சக்திகளும் செயலற்று நிற்கும். அப்போழ்து காரண சரீரமாகிய இலிங்க தேகத்திற்கு அணுவாகிச் செல்கின்றான். மேற்பிறப்பிற்கு ஏதுவாகிய அவா இல்லாமை யால் காரண தேகத்தை இவன் கண்டும் அஃது ஓர் கதிக்கண்ணும் இவனை விழுத்தட்டாது. காரண தேகமாகிய இலிங்கக்கட்டை, திருடன் தூங்கு வோனது முடிச்சை எளிதே யவிழ்ப்பதுபோல், அவிழ்த்து தனது அணுவை (பிராண சொரூபத்தை) அஃது பிறத்தற் கிடமாகிய ஆத்மாவினிடம் ஒடுக்கி விடுகின்றான். இதுவே சாங்கியன் தேடும் ஆத்மலாபமாகிய கைவல்யம்.

சாங்கியன் ஆத்ம லாபத்தைக் கருதி நிற்பது சோரன் தன்பால் அன் புள்ள இளங்கன்னிகையைச் சமயம் பார்த்துப் புணர்தற்குச் செல்லுதல் போலாமென்க வீட்டிலுள்ள சேதனர் யாவரும் (தாய், தகப்பன், மக்கள், நாய் முதலியன) தம்மை யயர்ந்து நித்திரை செய்யினும் சுவைகண்ட கன்னிகை தூக்கங் கொள்ளாது எதிர்பார்த்திருப்பதுபோல் ஆத்மா (தனது ஹம்சத்தை) அணுவை எதிர்பார்த்து நிற்கும். சோரன் கன்னிகை நித்திரை புரியும் அறை யைத் திறக்கும் திறவுகோலையும் உடன்கொண்டு போவதாய் எளிதிற் கத வைத் திறந்து கன்னிகையைப் புணாகின்றான்.

சாங்கியன் தனது தந்திரத்தால் ஆத்மலாபமாகிய முத்தியைப் பெறு வன். யோகியோ தனது சக்தியாலும் தந்திரத்தாலும் எச் சித்திகளையும் முடிக்க வல்லன். திறவுகோலுடன், ஆற்றலோடு செல்லின் எதிர்ப்பாரை யடக்கி மோக்ஷவீட்டைத் திறந்து நிர்ப்பயமாய் முத்தி மாதோடுங்கூடி யின் புறலாம்.

சாங்கியன் மந்திரபலமின்றி தனது தந்திரத்தால் முத்தி யடைவன்; யோகி தந்திரமும் மந்திரமுமாகிய இரண்டையுங்கொண்டு முத்திச் சுவை யைக் காண்பன்.

இராஜயோகிக்கே அதிகாரத்தோடு முத்தி கைகூடும், சாங்கியனுக்கு உபாயத்தால் முத்தி கைகூடும்.

யோகி காட்டும் வழி சித்தியோடு முத்தி; சாங்கியன் காட்டும் வழி சித்தியின்றி முத்தி.

சாங்கியன் முத்தித்தானத்தைத் தெளிவாய்க்காட்டி பிராணன் இத் தேகத்தை வினைவழி யாட்டுவிக்கக் கொணர்ந்த இயக்கம் முழுமுற்றும் செல வாகி வாளாநிற்கும தருணமாகிய மரணகாலமே அவ் முத்தித்தானத்தை மெய்யாகக் கிட்டுதற்கு உகந்த காலமென்றான். தருணம் பார்த்து பிறவிச் சுழலைத் தாண்ட வேண்டுமென்பது சாங்கியன் கருத்து. அதுவரை அவா வின்றி பிராரப்த கன்மத்தை யனுபவித்து தேகச்சிறை நீங்காது அதன் கண் வாழ்கவென்றான்.

சாங்கியன் மரண தரிசனங் கிட்டும் வரை ஜீவன் முத்தனுயும் ஜீவபந்த னுயு மிருப்பன். இனிப் பிறப்பில்லாமையால் முத்தன் ஆயினும் இத் தேகத் தில் நேரும் இன்ப துன்பங்களைத் துய்க்கவேண்டி யிருத்தலின் ஜீவபந்தனு மாவன். ஆயினும் தான் பெற்றுள்ள ஞானத்தின் வலியால் இன்ப துன்பங் கள் இவனை யழுத்தி மேற்கதியை மறைக்க லாற்று.

[தேகத் தொடக்கறுந் தருணம் நேர்ந்துழி யாது நிகழ்கின்ற தென்ப தனை நன்கு விளக்கலுற்றார்.]

# விசித்திர  விநோதம்



மாஜிஸ்டிரேட்:-"குற்றவாளி சொல்வதெல்லாம் நிஜமா ?"

சேவகர் :—" அது எப்படி யிருக்கும், நிஜமெல்லாம் தான் நாங்கள் உதைத்து பிடுங்கிக் கொண்டோமே"

* * *

உபாத்தியாயர் :—இட்டாலியில் ஓடும் ஆறு எது சொல்?

பையன்:—இட்டலியில் ஓடும் ஆறு சாம்பார் சார்.

* * * *

ஒருவர்—"பரமனை பார்க்கும்போதே பரிதாபமாய் இருக்கிறது. ஆனால் அவன் தம்பி ஆறுமுகம் ஆனந்தமாகவே காலங் கழிக்கின்றான்."

மற்றவர்:—"காரணம் உனக்குத் தெரியாதா? பரமு பரிதாப வருஷத்திலும், ஆறுமுகம் ஆனந்த வருஷத்திலும் பிறந்ததினால்தான்."

* * * *



"அய்யர், இந்த சட்ணியில் பூச்சி விழுந்திருக்கு, இழவு."

"அது எப்படி சார் இருக்கும்? நாங்கள்தான் ஏதாவது விழுந்தால் சட்னியோடு அதைச் சட்னியாக்கி விடுகிறோமே"

* * *

பிரயாணி:—" என்னுடைய சைக்கிளை இங்கே விட்டு விட்டு அதன்மேல் இந்தக் கோட்டைப் போட்டுப் போனேன். கோட்டு மாத்திரம் இருக்கிறது சைக்கிளைக் காணோம்."

போலீஸ் :—" கோட்டை நன்றாக உதறிப் பார்த்தாயா ?

பட்டிக்காட்டான்:— இட்டலி என்ன விலே?

கிளப்காரன்:—இட்டலியும் சாம்பாரும் கால் அணு.

பட்டிக்காட்டான்:—அப்படி ஆனுல் சட்னி என்ன விலே.

கிளப்காரன்:—சட்னி சும்மா கொடுப்பது.

பட்டிக்காட்டான்:— அப்படி ஆனுல் கொஞ்சம் சட்னி கொடுங்கள்.

* * * *



நாயுடுகாரு:— "முதலியாரவான் என் பையன் அந்த பெண் வீட்டிற்குப் போகும் கெட்ட வழக்கத்தை நிறுத்திவிட்டான்.

முதலியார்:— "சந்தோஷம், காரணம்?"

நாயுடுகாரு:— "அவள் இறந்துவிட்டாள்."

* * * *

முதல் திருடன்:—(மற்றவனை நோக்கி) "நாம் திருடிக்கொண்டு வந்திருக்கும் ரத்தினகண்டி எவ்வளவு மதிப்பு பெறும்"

இரண்டாவது திருடன்:—"இதற்காக என்னடா கவலைப் படுகிருய்! நாம் திருடிக்கொண்டு வந்த செட்டியாரிடத்தில் போய் நீர் அதை எவ்வளவு ரூபாய் போட்டு செய்தீர் என்று கேட்டால் தெரிந்து போகிறது."

* * * *

தகப்பனுர்:—ஏனடா உன் கண்கள் கோவைப் பழம்போல் இன்று சிவந்திருக்கிறது. வகுப்பில் என்ன பண்ணிஞய்?

மகன்:—ஒன்றும் செய்யவில்லே யப்பா! அதற்காகத்தான் உதைகள்.

தகப்பன்:—நீ ஒன்றுகூட செய்யாதிருக்க உதைகள் எதற்காய்?

மகன்:—வேறொன்று மில்லே. கணக்குகள்தான் செய்யவில்லே.

* * * *

செட்டியார்:—பாக்கி எங்கே, வட்டிகொடுத்து நாளாயிட்டது?

கடன்காரன்:—கொடுக்கத் தெரியும்.

செட்டியார்:—அப்படி ஆனுல் கோர்ட்டில் போட்டு விடுவேன்.

கடன்காரன்:—கோட் தைத்துக் கொடுத்தால் சூட் போட்டுக் கொள்ளலாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## சமாதானத்துக்குப் புதுமையான வழி

உலக சமாதானம் ஏற்பட வேண்டுமென்றும், யுத்தம் ஒழிந்து எங்கும் அமைதி ஏற்பட வேண்டுமென்றும் எல்லாரும் விரும்புகிறார்கள். அதற்கு வழிகண்டு பிடிப்பதில் தான் அபிப்பிராய பேதங்கள் ஏற்படுகின்றன. ஆங்காங்கு ஆயுதப் பரிகரண மகாநாடுகள் கூடி யுத்த தளவாடங்களைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கின்றன. ஆனால் வல்லரசுகளோ தங்கள் பாதுகாப்புக்காக வேனும் குறிப்பிட்ட அளவு தளவாடங்கள் இருக்கத் தான் வேண்டுமென்று விரும்புகின்றன. இந்தக் குறிப்பிட்ட அளவு எவ்வளவு என்று முடிவு செய்வது யார்? இத்தாலியும் கூட எதியோபியாவைப் போன்ற நாடுகளை நாகரிகப் படுத்தவே அவற்றின் மீது படையெடுத்ததாகக் கூறுகின்றது. ஏகாதிபத்ய உணர்ச்சி ஒழிந்துபோய் எல்லா நாடுகளும் சுதந்தரத்துடன் இருந்தால் யுத்தம் ஒழிந்து விடுமென்பது சமதர்மிகளின் அபிப்பிராயம். பாரமார்த்திகத் தன்மையில் அதிக பற்றுடையவர்கள் உலகில் எல்லாருக்கும் ஆத்ம அறிவு அபிவிருத்தியாக வேண்டுமென்றும், ஆன்ம நேய ஒருமைப்பாடு ஏற்பட்டு விடுமென்றும் கூறுகின்றனர். ஆனால் இவர்கள் அனைவருடைய புத்திக்கும் எட்டாத ஒரு புதுமையான வழி ஜர்மன் தளகர்த்தரான ஜெனரல் கோயரிங்குக்குத் தோன்றி யிருக்கிறது. அவர் கூறும் வழி என்ன? கத்திகளைக் கூராக்கிக் கொண்டு இருக்க வேண்டுமாம். அவர் தங்கள் தேசமக்கள் ஜர்மனிக்காகவும் ஹிட்லருக்காகவும் உயிரையும் விடத் தயாராக இருப்பதாகக் கூறுகிறார். அத்தகைய தேசாபிமானத்தை நாமும் பாராட்டுகிறோம். இந்தியாவிலும் மக்கள் இந்தியாவுக்காகவும் மகாத்மாஜிக்காகவும் உயிரையும் விடத் தயாராக இருந்தால் சுதந்தரம் விரைவில் கிடைக்கும். ஆனால் கோயரிங் உலக சமாதானத்துக்காகக் கண்டுபிடித்த வழி மிருகத்தனமானதாக இருப்பதுடன் நெருப்போடு காற்று சேர்வதுபோல் இருக்கிறது. ஆயுதங்களைத் தயாரித்துக் கொள்வதால் ஒருபோதும் உலக சமாதானம் ஏற்படாது. மகாத்மாஜியின் அஹிம்சா போதனை உலகமெங்கும் பரவுதல் வேண்டும். ஏகாதிபத்ய உணர்ச்சி ஒழிந்து மானிட சகோதரத்துவம் ஏற்படவேண்டும். இவைதான் சமாதானத்துக்குஞ் சரியான வழிகளாகும்.

---

## வகுப்பு வாதத்துக்கு மருந்து

சமீபத்தில் நடைபெற்ற மாகாண சட்டசபைகளின் பொதுத் தேர்தலில் சிற்சில இடங்களில் காங்கிரசுக்கு அதிகமான வெற்றி கிடைக்காமற் போனதற்கு அந்தந்த மாகாணத்திலுள்ள வகுப்பு வாதமே காரணமாகும். பாஞ்சாலத்திலும், வாங்காளத்திலும் வகுப்பு வாதமும் அதற்கேற்ற தொகுதிப் பிரிவினைகளும் இருப்பதால் தான் காங்கிரஸ் மெஜாரிட்டியைப் பெற முடியவில்லை. ஆயினும் அங்கும் வகுப்பு வாதச் சேற்றி னின்றும் மக்களைக் கரை ஏற்றுவதற்கு ஒரு சரியான பரிகாரம் இல்லாமற் போகவில்லை.

சமதர்மக் கொள்கையில் பற்றுடைய பண்டித ஜவஹர் லாலுக்கு இத்தகைய பரிகாரங்கள் எளிதில் புலப் படுகின்றன. ஏனெனின் அவர் எந்த ஒரு விஷயத்தையும் பாமர மக்கள் சார்பாகவும், பொருளாதாரத் துறையைக் கொண்டும் பரிசீலனை செய்பவர். காங்கிரஸ் தலைவர்கள் இதற்கு முன்பு வகுப்பு வாதத் தலைவர்களுடன் சமரசம் செய்து கொள்வதே வகுப்பு வாதத்துக்கு மருந்து என்று நினைத்து அம் முயற்சியில் ஈடு பட்டிருந்தார்கள் ஆனால் காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் அது தவறு என்று கூறுகிறார். வகுப்பு வாதமெல்லாம் படித்தவர்களிடையிலும் பணக்காரர்களிடையிலும் தான் இருப்பதாயும் காங்கிரஸ் தலைவர்கள் எல்லா ஜாதி மதங்களையும் சேர்ந்த பாமர மக்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டு அவர்களிடையே காங்கிரஸ் பிரசாரத்தைப் பலமாகச் செய்து காங்கிரஸ் வெற்றி யடையும்படி செய்து விட்டால் வகுப்பு வாதம் தானாக மறைந்துவிடும் என்று அவர் கூறுகிறார். காங்கிரஸ் அவ்வழியையே பின் பற்றுவது நலம்.

---

## அசெம்பிளியின் போலித் தன்மை

இந்திய சட்டசபை என்னும் அசெம்பிளிக்குச் சாதாரணமாக இந்திய தேசத்துப் பார்லிமெண்ட் என்று சொல்வார்கள். அச்சபையில் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் அவர்களால் நியமிக்கப் பட்டவர்களுமாகச் சில அங்கத்தினர்கள் போக மற்ற பெரும்பான்மையோர் ஜனநாயக முறைப்படி மகா ஜனங்களின் சார்பாக ஓட்பெற்று அங்கம் வகிக்கும் பிரதிநிதிகள். உண்மையில் இந்தியா சட்டசபை ஜனநாயக தத்துவத்துடன் கூடியதாயின், மக்களின் நன்மைக்காக, மக்களால் அனுப்பப்பட்ட பிரதிநிதிகளால் நிறைவேற்றப்படும் தீர்மானங்களை அச்சபை ஏற்றுக் கொள்ளவேண்டும். அவ்வாறின்றி அதிகார வர்க்கத்தினர் அசெம்பிளியின் தீர்மானத்துக்கு மதிப்பே கொடுக்காமல் தங்களிஷ்டப்படி ராஜ்யம் செய்வதென்றால் அதற்கு இவ்வளவு செலவில் சட்டசபையை அமைத்துக் கொண்டிருப்பது அநாவசியமே யாகும். சமீபத்தில் இந்தியா சட்டசபையில் நிதி மசோதாவுக்கு எதிர் கட்சியினர் பல திருத்தங்களைக் கொண்டுவந்து நிறைவேற்றியும் ஒன்றைக்கூட அதிகார வர்க்கத்தினர் ஏற்றுக் கொள்ளவில்லை யென்றால் அது அச்சபையின் போலித் தன்மையையே வெளியாக்குகின்றது. சர்க்காரின் கோடிக் கணக்கான வரவு செலவில் ஒருசில லக்ஷம் ரூபாய்களைக் குறைத்து விடுவதாலேயே சர்க்காருக்கு என்ன ஆபத்து வந்து விடப்போகிறது. நிதி மசோதாவைக் கடைசி முறையாக அப்படியே நிறைவேற்ற வேண்டுமென்னும் வைசிராயின் சிபார்சுடன் அசெம்பிளியில் கொண்டுவந்தபோது காங்கிரஸ்கட்சித் தலைவரான ஸ்ரீ புலாபாய் தேசாய் பல உண்மைகளை எடுத்துக் காட்டி இவ்வாறு வேஷதாரிகளாக நாடகம் நடிப்பதைவிட ஐம்பது வருஷங்களுக்கு முன் இருந்ததைப் போல் அதிகார வர்க்கத்தினர் சட்டசபைகளைக் கலைத்துவிட்டுத் தாங்களே யதேச்சாதிகாரம் நடத்துவதே மேல் என்று கூறியது முற்றிலும் பொருத்த முடையதாகும். அப்போது இவ்வளவு அபாரமான செலவு இல்லாமலாவது இருக்கும். யதேச்சாதிகாரம் செய்பவர்களில் நல்லவர்கள் வரும்போதாவது சில நன்மைகள் ஏற்படும். ஜனப் பிரதிநிதிகளின் முடிவுக்குச் சிறிதேனும்

மதிப்பு கொடுத்தால்தான் மக்களுக்குத் திருப்தியும் ஆறுதலும் ஏற்படும். அதிகார வர்க்கத்தினர் ஜனப் பிரதிநிதிகளை இவ்வாறு அவமதிப்பதால்தான் சில ராஜீய வாதிகளுக்கு இத்தகைய சட்டசபைகளில் நம்பிக்கை இல்லாமற் போகிறது. இனியேனும் இந்தியா சர்க்கார் நிர்வாகிகள் சாமர்த்தியமாக நடந்து கொள்வார்களென்று நம்புகிறோம்.

---

## தமிழருக்கு மகாத்மாஜி உபதேசம்

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையின் பட்டமளிப்பு விழாவும் அகில இந்திய ஹிந்தி பரிஷத சம்மேளனமும் சென்றமாத மத்தியில் சென்னை தியாகராய நகரிலுள்ள ஹிந்தி பிரசார சபைக் கூட்டத்தில் நடைபெற்றது. பட்டமளிப்பு விழாப் பிரசங்கத்தை பாபு புருஷோத்தம தாஸ் தாண்டன் செய்தார். மகாத்மாஜீ தலைமை வகித்தார். அப்போது அவர் பொதுவாகத் தென்னிந்தியருக்கும் சிறப்பாகத் தமிழர்களுக்கும் செய்த உபதேசம் கவனிக்கத் தக்கது. தேசத்திற்கு ஒரு பொது பாஷை அவசிய மென்பதை அனைவரும் உணர்ந்திருக்கிறார். காந்திஜீயே தமது அனுபவத்தில், தேசத்தில் ஒரு பாஷை தேசீய பொது பாஷையாக ஏற்படக் கூடுமாயின் அது ஹிந்தி பாஷையே என்று தெரிகிறதெனக் கூறுகிறார். அவர் தான் இந்தியாவின் முடிசூடா மன்னராக இருந்து கொண்டு இந்தியா பூராவிலும் சுற்றி வருவதுடன் எல்லா மாகாணங்களிலுமுள்ள பாமர மககளுடன் பேசிப் பழகி யிருக்கிறார். ஆதலின் அவரது அனுபவத்தில் தோன்றும் விஷயமே தேசத்துக்குச் சரியானதாக இருக்கு மென்பதில் சந்தேகமில்லை. மகாத்மாஜீ தமது பிரசங்கத்தில் தென்னிந்தியர் ஹிந்தி கற்றுக் கொள்வதில் தக்க அபிவிருத்தி காண்பிக்காதது பற்றி மிக வருந்தினார். அவர் ஆங்கிலம் கற்க வேண்டாம் என்று கூறவில்லை. அதை ஒரு அளவுக்குத் தான் படிக்க வேண்டுமென்பது அவரது அபிப்பிராயம். மாகாண பாஷைகள் விஷயத்தில் அவர் தெரிவித்துள்ள அபிப்பிராயத்தை நமது தமிழர்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது அவசியம். தமிழர்கள் ஹிந்தி பிரசாரத்தால் தமிழுக்கு ஆபத்து வந்துவிடுமென்றும், ஹிந்தி கற்பது சமஸ்கிருதத்துக்கும் பார்ப்பனீயத்துக்கும் பலத்தை அளிப்பதாகு மென்றும் சிலர் துவேஷப் பிரசாரம் செய்கிறார்கள். அது தவறு என்பதை மகாத்மா தமது பிரசங்கத்தில் நன்கு விளக்கியுள்ளார். மாகாண பாஷைகளுக்குத் தாம் அதிக மதிப்புக் கொடுப்பதாயும், தமிழ், தெலுங்கு ஆகிய பாஷைகளையும் தாம் கற்றுக்கொள்ள முயற்சிப்பதாயும், ஹிந்தி பரவுவதாலேயே மாகாண பாஷைகளின் வளர்ச்சி எவ்வகையிலும் குன்றாது என்பதாயும் தெரிவித்துள்ளார். அவர் கூறிய மற்றொரு விஷயத்தை அவசியம் கவனித்தல் வேண்டும். அவர், தமிழர்கள் தங்கள் பாஷையின் முக்கியத்துவத்தை இதர மாகாணவாசிகள் மனதில் பதியும்படி வற்புறுத்த வேண்டிய கடமையைச் சரிவரச் செய்யவில்லை. தேசீய வாழ்க்கை அபிவிருத்தி யடைய வேண்டுமானால் எல்லா மாகாணவாசிகளும் பரஸ்பரம் ஒருவர் மற்றவர் பாஷையைக் கற்கவேண்டும்' என்று கூறி யிருப்பதை தமிழ்மக்கள் கவனிப்பார்களாக!

---

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன் எம். ஏ., எல். டி.)



(721-வது பக்கத் தொடர்ச்சி)

கொஞ்சம் இருள் எங்கும் சூழ்ந்து கொண்டிருந்த படியால் முத்தைய செட்டிக்கு சின்னப்ப செட்டியாரின் முகம் சிறிதே தெரிந்தது. அவரோடு சண்டை பிட்டுக்கொண் டிருந்தவருடைய முதுகுப்பக்கம் முத்தய்யனுக்கு அன்னாருடைய முகத்தைப் பார்ப்பதற்கு இடைஞ்சலாகவும் முட்டுக்கட்டை போட்டது போலவும் இருந்தது. முகம் தெரியாமல் போனாலும் அந்த மனிதனுடைய நீண்ட உயரம் முத்தய்ய னுக்கு அந்த மனிதன் யாரென்பதை அறிந்துகொள்ளப் போதுமானதாக இருந்தது.

எங்கு அவன் சின்னப்ப செட்டியாரைக் கடலினுள் தள்ளி விடுகிறானே வெனும் எண்ணம் முத்தையனுக்கு கலவரத்தைக் கொடுத்தது. சின்னப்ப செட்டியாருடைய வஞ்சக நாடகத்தை நன்கறிந்திருந்த முத்தய்யன் அதைப் பொருட்படுத்தாமல் எபபடியாவது அவரைக் காப்பாற்ற வேண்டுமென்று துரிதமாக ஓடினான். சின்னப்ப செட்டியார் அவனுககு முன்பு ஒரு கத்தியை பரிசு கொடுத்திருந்தார். அதை எடுத்துக் கொண்டு, மற்றவன் சின்னப்ப செட்டியாரை ஒன்றும் செய்யாமல் பாதுகாக்க வேண்டும் எனும் கருத்துடன் அதைக் கையில் எடுத்துக் கொண்டான். அப்பொழுது சின்னப்ப செட்டியாரை மற்றவன் சமுத்திரத்தினுள் தள்ளி விடுவான்போல் முத்தய்ய செட்டிக்குப் புலப்பட்டது. செட்டியாரைக் காப்பாறற வேறு வழி யில்லாமையால் அவன் மற்றவனைக் காயப்படுத்தி விட்டால்போதும், சண்டை நின்றுவிடும் எனும் எண்ணத்தோடு கத்தியை நீட்டினான். அப்பொழுது எதிர்பாராத விதமாக உயரமாக இருந்த மனிதன் செட்டியார் இருந்த பக்கம் சரேலென்று போனான். சின்னப்ப செட்டியார் அவனைத் தள்ளிவிட வேண்டும் எனும் கருத்தைக்கொண்டு மற்றவனோடு போராடினார். ஆனால் மற்றவன் செட்டியாரைக் கீழே தள்ளிவிட்டு, ஓடுவதாயினான். செட்டியார் கீழே விழும்பொழுது முத்தையனுடைய கத்திக்கு இரையானார். வெள்ளரிக்காயினுள் கத்தி எங்ஙனம் ஏறுமோ அங்ஙனம முத்தய்யசெட்டி எதிர்பாராத விதத்தில் அவனுடைய கத்தி சின்னப்ப செட்டியாருடைய முதுகினுள் பாய்ந்து, இரத்த வெள்ளத்தைக் கொண்டுவந்து விட்டது. நாம் இவற்றை எழுதுவதற்கு இத்தனை நிமிஷங்கள் ஆகிறதே தவிர முத்தையனுக்கு இது ஒரு நிமிஷத்திறகுள் நடந்து விட்டது.

சின்னப்ப செட்டியார் மயக்கமுற்றுக் கீழே விழுந்து உயிர் நீத்ததையும் அதற்கு இரண்டு செகண்டுகளுக்குமுன் உயரமாக இருந்த விரோதி ஓடிப் போனதையும் முத்தையசெட்டி அறிந்து கிலேசமடைந்தான். ஓடிப்போன வனுடைய முகம் சிறிது அவனுக்குத் தெரிந்தது. சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஏன்? ஓடிப்போன உயரமான மனிதன் அவனு டைய வெள்ளை தொப்பியை புருவங்கள் வரைக்கும் இழுத்துப் போட்டுக் கொண்டிருந்தான்.

முத்தய்ய செட்டி இரண்டு நிமிஷங்கள் யோசனை செய்தான். அங்கு இருந்தால் ஆபத்து தன்னைச்சாரும் என்று கருதியவனாய் சைகிலை எடுத்துக் கொண்டு வெள்ளைதொப்பி மனிதனைப் பிடித்து விடவேண்டும் என்று முடிவுசெய்து வேகமாகப் போனான். ஆனால் முடியவில்லை.

அரைமணி நேரத்திற்குப் பின் முத்தய்யசெட்டி தன்னுடைய முட் டாள்தனத்திற்கு நொந்து கொண்டான். தன்னுடைய பெயர் தீட்டிய கத் தியை சவத்தின் முதுகுப்பக்கத்தில் விட்டுவந்தது தனக்கு பேராபத்தை விளைவிக்கும் என்று தெரிந்து கொண்டானதலால் கத்தியைக் கொண்டு வந்துவிட வேண்டும் என்று மறுபடியும் பைசைகிலில் ஏறிச் சென்றான். கடற்கரையில் பிணத்தைக் காணோம்! என்ன ஆச்சரியம்! தன்னுடைய கண்களையே அவன் நம்பக்கூடவில்லை. சின்னப்ப செட்டியாருடைய சவத்தை யார் கொண்டு போயிருப்பார்கள்? அல்லது அதைக் கடல் அலைகளே விழுத் துக் கொண்டனவோ? முத்தய்ய செட்டிக்கு திகைப்பும் பயமும உண்டா யினவாதலின் என்ன செய்வது என்பதை அறிய மாட்டாதவனாய் மரம் போல் நின்றான். உடம்பு முழுவதும் வியர்வைவெள்ளம் தோன்றியது. தன்னைக் கொலையாளி என்று யாவரும் கூறுவது திண்ணம் எனக் கொண் டான். ஏன்? சின்னப்ப செட்டியார் உயிருடனிருக்கையில் முத்தய்ய செட்டி யின் சகோதரி குமாரியின் கற்பைக் கெடுக்க முற்பட்டதும் அதனால் முத்தய் யன் கோபத்தோடு செட்டியாருடைய கத்திக்கடையை விட்டுச் சென்றதும் சைதாப்பேட்டை மாஜனங்கள் நன்றாக அறிந்திருந்தார்கள். அதை முத் தய்ய செட்டி நினைத்துக் கொண்டதும் ஸ்தம்பித்துப் போனான். வஞ்சம் தீர்த்துக் கொள்ளவே செட்டியாரைக் கொலைசெய்து விட்டதாக எல்லோரும் நினைத்துக் கொள்ளுவார்களே என்று கவலை கொண்டான். மறுபடியும் பைசைகிலின்மீது ஏறிச் சென்றான்.

வழியில் ஒரு ஹோட்டலில் பைசைகிலை வைத்துவிட்டு ஆகாரம் உட் கொண்டான். பின்பு ஒரு சத்திரத்தையடைந்து துயில் கொண்டான். வீட்டிற்குப் போனால் எங்கு போலீஸார் தன்னைத் தேடிவந்து விடுவார்களோ என்று பயங் கொண்டிருந்தான்.

மறுநாள் அதிகாலையில் அவன் சத்திரத்தைவிட்டு ஒரு காபி ஹோட்டலை யடைந்து கொஞ்சம் சிற்றுண்டி எடுத்துக் கொண்டான். அப்பொழுதும் அவனைப் பயம் விட்டபாடில்லை. கத்தியை ஆதாரமாக வைத்துக்கொண்டு போலீஸார் எங்கு தன்னைக் கொலையாளி என்று கைதுசெய்துவிடுவார்களோ எனும் பயம் அவனை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது.

அன்று சாயுங்காலம் அவன் மாறுவேஷம் போட்டுக்கொண்டு வெளியே

பைசைகிலில் போகையில் ஒரு தினசரியை விலைக்கு வாங்கி, அதைப் படித்தான். "பதினெட்டு வயதான வாலிபன் பழிக்குப் பழி வாங்குகிறான்." என்று பெரிய எழுத்துக்களில் அச்சடிக்கப்பட்டிருந்த விஷயத்தைப் படித்து, அதைரிய மடைந்தான்.

நான்கு தினங்களுக்குப் பின் மறுபடியும் தினசரிகளில் கடற்கரை கொலையைப் பற்றி விஷயங்கள் பிரசுரமாகி இருந்தன. மூத்தய்ய செட்டியின் கத்தியைப் பற்றி ஒரு குறிப்பும் இருந்தது.

"ஐயோ! அந்தக் கத்தியைப் பற்றி என்ன சரித்திரம்! அது இப்பொழுது போலீஸாரிடம் இருக்கிறது! சின்னப்ப செட்டியாரின் பிரேதம் கீழே கிடந்தது கடலில் இருந்தும் எடுக்கப் பட்டதா? அல்லது அவரைப் பகைத்தவன் ஏதாவது சூது செய்தானு?" என்று மூத்தய்ய செட்டி எண்ணமிட்டான். இந்திரா தன்னைப்பற்றி என்ன நினைப்பாளோ என்று கருதினன். அவளுடைய தந்தை உயிருடன் இருந்த பொழுது செங்கோட்டை ஜெமீந்தாருடைய குமாரன் இராஜ மன்னனை இந்திரா மணக்கவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்ததை அவன் நினைத்தான். தகப்பனர் நிர்ப்பந்தத்தை அவள் விரும்ப வில்லை என்பதையும் அவன் அறிவான்.

இராஜ மன்னனுடைய நடத்தையைப் பற்றி மூத்தய்ய செட்டி சில உண்மைகளை அறிந்து கொண்டிருந்தான். இந்திராவின் சொத்திற்கு ஆசைப் பட்டு அவளை மணக்கவே அவன் முன் வந்ததை அவன் நன்கு அறிவான். அதனல் மனதார அவனை வெறுத்தான். "இப்பொழுது இந்திரா என்ன செய்வாளோ? எனது தெய்வீகத் தன்மை வாய்ந்த காதலை எப்படி அவளுக்குணர்த்துவது? என்னை அவளுடைய தந்தையின் கொலையாளி என்றல்லவோ இப்பொழுது நினைத்துக் கொண்டிருக்கிறாள்? இந்த தர்ம சங்கடத்திற்கு என்ன செய்வது? சரி—எதற்கும் அந்த வெள்ளைத் தொப்பி மனிதனைக் கண்டு பிடித்து, உண்மையை நிரூபிக்க வேண்டும்," என்று மூத்தய்ய செட்டி மறுபடியும் தனக்குள் நினைத்தான்.

மறுநாள் அதிகாலை. இரண்டு மணி சமயம். மூத்தய்ய செட்டி வெள்ளை தொப்பி மனிதனைப் பற்றி நினைத்த வண்ணம் பைசைகிலில் கடற்கரைப் பக்கம் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது சின்னப்ப செட்டியார் கொலையுண்ட இடத்திலிருந்து செங்கோட்டை ஜெமீந்தார் மாளிகை சிறிது தூரத்தில் கடற்கரையருகே இருப்பதை அவன் உணர்ந்தான். அப்பொழுது வெள்ளை தொப்பியை யணிந்த அவனுடைய விரோதி மெல்ல ஜெமீந்தார் மாளிகையின் தோட்டத்தினுள் செல்வதைக் கண்ணுற்றான். அவனைக் கண்டுபிடித்து விட்டதாகக் கருதிய மூத்தய்ய செட்டி அவனைப் பின் தொடர்ந்து, சப்தம் இல்லாமல் சென்றான். வெள்ளைத் தொப்பி மனிதன் தன்னை யாராவது பின் தொடருகிறார்களா என்பதை நன்றாக யோசித்துப் பின்னும் முன்னும் பார்த்தான். ஒருவரும் இல்லை எனத் தெளிந்து, செங்கோட்டை ஜெமீந்தார் மாளிகையின் தோட்டத்தினுள் மெல்லச் சென்றான். செல்லுகையில் தோட்டக் கதவைத் தாளிடாமல் திறந்து வைத்துச் சென்றான். அதைக் கண்ட மூத்தய்ய செட்டி சந்தோஷ மடைந்தான். "இவன் இந்த வழியாகத் தானே வரவேண்டும். எதற்கும் நான் இந்த மாளிகையின் இப் பாரிசத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தால் போதும்; இவன் ஏதாவது

திருடிக் கொண்டு போகையில் சுலபமாகப் பிடித்து விடலாம்,'' என்று எண்ண மிட்டான். அதன்படியே மாளிகையின் ஒரு புறத்தில் மறைந்து தனது விரோதி வருவதை எதிர் நோக்கி யிருந்தான்.

கொஞ்ச நேரங் கழித்து அம் மாளிகையின் மாடி அறையி லிருந்தும் யாரோ இறந்து போகும் மனிதரைப் போல் கூக்குரல் ஒன்று ஈனஸ்வரத்தில் செய்வதைக் கேட்டான். உடனே மூத்தய்ய செட்டி வெளியே வந்து மேலே நோக்கினன். அப்பொழுது ஒரு மனிதருடைய உருவம் பால்கனியி லிருந்தும் கீழே தடா ரென்று வீழ்த்தப்பட்டதைக் கண்டு ஸ்தம்பித்துப் போனன். மேலே மறுபடியும் பார்வையைச் செலுத்தினன். என்ன ஆச்சரியம்! வெள்ளை தொப்பியைத் தரித்துக் கொண்ட மனிதன் கீழே பார்ப்பதைக் கண்ணுற்றான். மூத்தயனுடைய ஜென்ம விரோதி! சந்தேகமில்லை. அவனைப் பிடித்து விட வேண்டும் என்று மூத்தய்யன் தீர்மானம் செய்கையில், அம் மாளிகையின் வீதிக் கதவைத் திறந்து கொண்டு ஒருவர் ஓடிவந்தார். மூத்தய்ய செட்டியின் மீது "டார்ச்" விளக்கு ஒளியைத் திருப்பினர்.

"யாரது? நீ ஓடினல் உன்னைக் கொன்று விடுவேன்," என்று மூத்தய்யனைப் பார்த்துச் சொன்னர். அப்பொழுது ஒரு ரிவால்வர் அவர் கையில் தயாராக வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

"நீர் என்னைக் கொல்ல வேண்டாம். நான் ஓடுவதில்லை. உண்மையான திருடன் மாடியில் இருக்கிறன்," என்று மூத்தய்ய செட்டி உரைத்தான்.

"நீ எனக்கு ஒன்றும் சொல்ல வேண்டுவதில்லை. நான் உண்மையை அறிவேன்," என்றர் அந்த மனிதர்.

பின்னர் அவர், "திருடன்! திருடன்!" என்று மூத்தய்ய செட்டியோடு ரகளை செய்து கூவினர்.

வீட்டிலிருந்த எல்லா மனிதர்களும் அங்கே ஓடிவந்து விட்டார்கள். விளக்குகளும் கொண்டுவரப்பட்டன.

மூத்தய்ய செட்டியின் மாறு வேஷத்தைக் களைந்து பார்க்கையில் முதலில் அவனைப் பிடித்தவர், "இந்திராவின் தகப்பனரைக் கொன்ற பாதகன்!" என்று ஆச்சரியத்தோடும் கோபத்தோடும் இரைத்தார்.

"இக் கொலையாளிக்கு இங்கு என்ன வேலை?" என்று மற்றொருவர் கேட்டார்.

அச் சமயத்தில் ஒருவர் செங்கோட்டை ஜெமீந்தாருடைய சவம் கீழே அலங்கோலமாக இருப்பதைக் கண்டு, "இவரைக் கொலை செய்து விட்டான்!" என்று அலறினர்.

மூத்தய்ய செட்டிக்கு திகில் உண்டாயிற்று. "பிள்ளையார் பிடிக்கப் போய் குரங்காக முடிவதை"க் கண்டு திகைத்துக் கல்லாய்ச் சமைந்து போனன். தனது கத்தி ஜெமீந்தாருடைய முதுகிலும் செலுத்தப் பட்டிருந்ததைக் கண்டு மலைத்துப் போனன். எல்லோரும் அவனை தூஷித்தனர்.

சில தினங்களுக்குப் பிறகு முத்தய்ய செட்டி இரண்டு கொலைகளுக்காக ஹைகோர்ட்டில் விசாரணை செய்யப்பட்டு, தண்டனை பெற்றான். அவனது இளவயதை யுத்தேசித்து மரண தண்டனை விதிக்கப் படவில்லை. சிறைச் சாலையில் காலத்தைக் கழிக்குமாறு உத்திரவு பிறந்தது. ஆனால் பல தினங்கள் ஆன பின் முத்தய்ய செட்டி சாமர்த்தியமாக சிறைச்சாலையி லிருந்தும் தப்பி ஓடி விட்டான்.

போலீஸ் புலிகள் அவனைக் கண்டு பிடிக்கப் பல வேஷங்களைப் போட்டும் முடியவில்லை. பல கொலைகள், திருட்டுகள் முதலாயினவற்றி முத்தய்ய செட்டி சேர்ந்து விட்டான் என்று எங்கும் பேச்சு உண்டாயிற்று. ஒவ்வொரு குற்றத்திலும் அவன் மாயமாக வேலை செய்து மறைந்து போனமையால் சென்னை போலீசார் அவனை "மாயா விரோதி" என்று கூப்பிடுவதாயினர்.

பிரதம துப்பறியும் உத்தியோகஸ்தர் ஸிம்ஹளநாதர் எப்படியாவது மாயா விரோதியைக் கண்டு பிடித்து விடுவதாகச் சபதம் செய்தார். ,அதனபடியே முத்தய்ய செட்டியை ஒரு கொலைக் குற்றத்தில் கண்டு பிடித்து, தண்டனை கொடுப்பித்து, ஒரு பிரத்தியேகக் கப்பலில் அவனை அந்தமான் தீவுகளுக்குப் போகுமாறு செய்வித்தார்.

இப்பொழுது முத்தய்ய செட்டிக்கு முப்பத்தைந்து ஆண்டுகள். பாவம்! சிறைக் கப்பலில் செல்ல வேண்டியதாயிற்று.

மேல் சொன்ன முத்தய்ய செட்டியின் சரித்திரத்தை உதவிக் கப்பல் தலைவர் சிந்தாமணி தமக்குள் நினைத்துக் கொண்டார். அதைரியமும் கோபமும் அவரை வாட்டி வதைத்தன.

"எல்லப்ப செட்டியார், எனக்கு என்னமோ அவனைப்பற்றி யோசனை செய்கையில் அச்சம் ஏற்படுகிறது இக்கப்பலில் சில கைதிகள் இருக்கின்றனர். அவர்கள் செய்யும் அட்டகாசம் சொல்லி முடியாது. மாயா விரோதி எப்படியும் ஒரு சூழ்ச்சி செய்து அதன் மூலியமாக அவர்களை விடுதலை செய்து விடுவதாகப் பேச்சு நடந்ததாம். நம்மை எல்லோரையும்—கப்பல் அதிகாரிகளை—சிறை வைத்து விடுவார்களாம். எனக்கு இந்தப் பேச்சைக் கேட்டது முதல் கைதிகளை நான் சப்தம் போடாதபடி பார்த்துக கொள்ளுமாறு உத்தரவு போட்டிருக்கிறேன் வார்டர்களுக்கு," என்றார் சிந்தாமணி.'

எல்லப்ப செட்டியார் வாய்விட்டுச் சிரித்தார்.

"நீங்கள் ஏன் இப்படி பயந்து சாக வேண்டும்? இந்த "ஜல தூதனி"ல் பீரங்கிகள் இருக்கின்றன. நம்மிடம் ஐம்பது போர் வீரர்களும் உளர். மாயா விரோதி எப்படி நம்மைச சிறையில் அடைக்க முடியும்?" என்று கேட்டார் கப்பல் தலைவர்.

## இரவு எட்டு மணி

கப்பல் அதிகாரிகள் உட்கார்ந்து சந்தோஷமாக ஆகாரத்தை உட்கொண்டிருக்கின்றனர். ஒரு புறம் கொஞ்ச தூரத்தில் போர் வீரர்கள்

காவல் புரிந்து கொண்டிருக்கின்றனர். அச் சமயத்தில் இரு வீரர்கள் ஓடோடியும் வந்து, எல்லப்ப செட்டியாரிடம், "மாயா விரோதியை அவனுடைய அறையில் காணோம். தப்பித்துக் கொண்டான்," என்றார்கள்.

உதவிக் கப்பல் தலைவர் சிந்தாமணிக்கு பேச நாவெழவில்லை. எல்லப்ப செட்டியார் எழுந்திருந்தார்: சாப்பாட்டை முடிக்க வில்லை. எழுந்து நடக்க யோசித்தார். சிந்தாமணியின் அதைரியம் அவருக்கும் வந்து விட்டது!

"அவனைக் காத்திருந்த இரண்டு போர் வீரர்களும் கொலை செய்யப் பட்டிருக்கிறார்கள். மாயா விரோதியின் கால்களுக்கும் கைகளுக்கும் போடப்பட்டிருந்த இரும்புச் சங்கிலிகள் சிதறுண்டு கிடக்கின்றன," என்று மேலும் அப் போர் வீரர்கள் சொன்னார்கள்.

சிறிது நேரத்திற்குப் பின் அக் கப்பலின் எல்லா இடங்களிலும் சோதனை நிகழ்ந்தது. மாயா விரோதியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சிந்தாமணியும் எல்லப்ப செட்டியாரும் ஆச்சரியமும் பயமும் கொண்டனர்.

இரவு பனிரெண்டு மணி ஆன பொழுது திடீரென்று பீரங்கிகளின் முழக்கம் காதுகளைத் துளைக்க வாரம்பித்தது. கைதிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து மாயா விரோதிக்காக கலகம் செய்தனர். பீரங்கிகள் யாவும் போர் வீரர்களால் பாதுகாக்க முடியவில்லை. மாயா விரோதியின் பெயரைச் சொல்லிக் கொண்டே பல கைதிகள் கலகம் செய்து, பீரங்கிகளைக் கைப் பற்றிக் கொண்டார்கள். கப்பல் அதிகாரிகள் எல்லோரும் சிறை செய்யப் பட்டு, முன்பு கைதிகள் பூட்டி வைக்கப்பட்ட இடங்களில் பந்தோபஸ்து களோடு அடைத்து வைக்கப்பட்டனர். கைதிகள் கலகம் திடீரென்று ஆரம் பித்து, திடீரென்று முடிவுற்றது. ஜயம் அவர்களிடமே! ஆனால் மாயா விரோதி எங்கே? எங்கே? எனும் பேச்சு அடிக்கடி கைதிகளால் கேட்கப் பட்டது.

அப்பொழுது போர் வீரன் உடையில் ஒருவன் தோன்றி, "நான்தான் மாயா விரோதி! நீங்கள் பயப்பட வேண்டாம்!" என்று தைரியத்தைக் கொடுத்தான்.

கைதிகள் யாவரும் சந்தோஷமடைந்தனர்.

"நாம் இனி நமது கப்பல் அதிகாரிகளை நியமிக்க வேண்டும். நீங்கள் என்னை இனிமேல் கப்பல் தலைவர் எல்லப்ப செட்டியார் என்று அழைக்க வேண்டும்," என்றான் துணிகரம் மிக்க மாயா விரோதி.

"நீங்கள்தான் எங்களுக்குத் தலைவர் இங்கே," என்று எல்லா கைதிகளும் சப்தம் செய்தனர்.

(தொடரும்)

---

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ஈசுவரஞு சித்திரைமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937ஞு ஏப்ரல்மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | செவ் | திரி45-22 | பர5-33 கி❋59-8 | சித்60 | கிருத்திகை, விஷு புண்ய காலம், வருஷப் பிறப்பு |
| 2 | 14 | புதன் | சது37-40 | ரோ53-40 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 3 | 15 | வியா | பஞ்31-5 | மிரு49-23 | மர60 | லட்சுமி பஞ்சமி, ஸ்ரீபஞ்சமி |
| 4 | 16 | வெள் | சஷ்25-43 | திரு46-28 | சித்60 | சஷ்டி, கங்கோற்பத்தி |
| 5 | 17 | சனி | சப்21-50 | புன44-50 | சித்60 | அசோகாஷ்டமி |
| 6 | 18 | ஞா | அஷ்19-25 | பூச44-48 | சி44-48மர | பவான் உற்பத்தி [ந்தி |
| 7 | 19 | திங் | நவ18-20 | ஆயி46-8 | சித்46-8ம | ஸ்ரீராம நவமி, ஸ்ரீராம ஜய |
| 8 | 20 | செவ் | தச18-48 | மக43-48 | சித்60 | தர்மராஜா தசமி |
| 9 | 21 | புதன் | ஏகா20-28 | பூர52-22 | அமி60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 10 | 22 | வியா | து23-20 | உத்57-28 | மர57-28சி | பிரதோஷம்,வாமன துவா |
| 11 | 23 | வெள் | திர27-15 | அஸ்60 | அமி60 | தமன திரயோதசி [தசி |
| 12 | 24 | சனி | சது32-0 | அஸ்3-18 | மர60 | சித்ரகுப்த பூஜை |
| 13 | 25 | ஞா | ○37-30 | சித்9-55 | சித்60 | சித்திரா பௌர்ணமி |
| 14 | 26 | திங் | பிர43-40 | சுவா17-10 | அ17-10ம | |
| 15 | 27 | செவ் | துதி50-0 | விசா24-48 | மர24-48சி | |
| 16 | 28 | புத | திரி56-28 | அனு32-35 | சித்60 | |
| 17 | 29 | வியா | சது60 | கே40-15 | பி40-15சி | |
| 18 | 30 | வெள் | சது2-43 | மூல47-23 | அ47-23பி | |
| 19 | 1 | சனி | பஞ்8-10 | பூர53-30 | சித்60 | |
| 20 | 2 | ஞா | சஷ்12-20 | உத்58-5 | அமி60 | |
| 21 | 3 | திங் | சட்14-50 | திரு60 | அமி60 | |
| 22 | 4 | செவ் | அஷ்15-30 | திரு0-58 | சித்60 | |
| 23 | 5 | புத | நவ14-15 | அவி1-35 | பி1-35சித் | |
| 24 | 1937ஞு மேமீ 6 | வியா | தச10-50 | சத0-40 பூர37-35 | மர0-40சி | அவமாகம், ஏற்றம் ஸ்தாபிச்ச, மந்திரம் ஜெபிக்க |
| 25 | 7 | வெள் | ஏகா5-43 து58-55 | உத்52-50 | சி52-50அ | சர்வ,மத்வ ஏகாதசி,அவமாகம், சுப முகூர்த்தம் |
| 26 | 8 | சனி | திர50-43 | ரே46-50 | மர46-50சி | பிரதோஷம்,மச்சயஜயந்தி |
| 27 | 9 | ஞா | சது41-45 | அஸ்39-58 | சித்60 | மாச சிவராத்திரி |
| 28 | 10 | திங் | அ●32-28 | பர32-40 | சி32-40அ | சர்வத்திர அமாவாசை |
| 29 | 11 | செவ் | பிர23-3 | கி❋25-20 | சி25-20அ | வைசாகசுத்தம், கிருத்திகை |
| 30 | 12 | புதன் | துதி14-5 | ரோ18-28 | சித்60 | அக்ஷயதிரிதிகை (விசேஷ) |
| 31 | 13 | வியா | திரி5-50 சது58-40 | மிரு12-22 | மர60 | மாச சதுர்த்தி விரதம்,அவமாகம் |

| | | | |
|---|---|---|---|
| சனி | கு-பு சுக் | கே | |
| — | 12-ரிஷ-புத<br>14-மீன-சுக்<br>24-மேஷ-புத | | — |
| குரு | | | |
| | செ ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.